# சிவாஜி

நற்புகழுடன் பணிபுரிந்து விடைபெற்ற ஆளுநர் உஜ்ஜல்சிங்



1971 ஜூன். ஆனி




ஆண்டு : 36 ஜூன் 1971 இதழ் : 6



*பத்திராதிபர் :* திருலோகசீதாராம்

*Editor-English Section :* T. N. Ramachandran, B. Com., B. L.

ஆண்டுக் கட்டணம் ரூ. 10

அலுவலகம் : 2-A, கோட்டை ஸ்டேஷன் ரோடு, திருச்சி-2. (தொலைபேசி : 4848)






மாதவம் சிறந்து
மானிடம் உயர்க

# மதுவிலக்கு

இது ஒரு கேள்விக் குறியாக இருப்பதற்குக் காரணம் இன்றைய தி. மு. க. ஆட்சி என்று கருதவேண்டியதில்லை. பொதுவாகவே நமது மக்களிடையில் தர்மாவேசம் குறைந்து போயிருக்கிறதுதான் உண்மையான காரணம்:

புராண இதிகாச காலந்தொட்டு மதுப்பழக்கம் உலகில் எல்லா நாடுகளிலுமே இருந்து வந்திருக்கிறது. அதேபோல் அரசியல் என்றுலே கொலை, கொள்ளை, யுத்தம், நாடுபிடித்தல், மக்களை சிறைபிடித்தல் என்பதெல்லாமும்கூட உலகில் எல்லா நாடுகளிலும் எல்லாக் காலத்தும் இருந்தே வந்திருக்கிறது.

சமுதாய வாழ்வில் தார்மீக அறவுணர்வுகளை அடிப்படையாக அமைத்து, சரித்திரம் காணுத அற்புதங்களைச் சாதித்த மகாத்மா காந்தி அடிகள்தான், அரசியலில் அஹிம்சையையும் சாத்வீகத்தையும கொண்டுவந்தார். அதையொட்டியே பன்னெடுங்காலமாக உலகெங்கும் வழக்கமாக இருந்துவந்த மதுப்பழக்கத்தையும் பாரதநாட்டு மக்கள் வெறுக்கும்படியான புதிய மனுேபாவத்தை உருவாக்கினுர்.

காந்தியடிகளின் அடிச்சுவடுகள் மறைந்து அவரது வாழ்வு ஒரு சரித்திர சம்பவமாக மட்டுமே ஆகியிருக்கும் இந்நாளில் அவரது கோட்பாடுகளும் அறத்துணிவுகளும் ஒவ்வொன்ருக மறைந்து வருவதே மீண்டும் மதுவரக்கன் உயிர் பிழைத்து வருவதற்கும் காரணமாகும். இன்னும் சொல்லப்போனுல் மதுவரக்கன் ஒருநாளும் இறக்கவில்லையென்றும், இதுகாறும் தலைமறைவாக நடந்துகொண்டிருந்த அவனது ஆட்சி இப்பொழுது சட்டபூர்வமாகவே அங்கீகாரம் பெறுகின்ற அந்தஸ்துக்கு வந்துகொண்டிருக்கிறதென்றும்தான் கூறவேண்டும்.

நாட்டின் பொருளாதார நெருக்கடிக்கு மதுவரக்கன் விடுதலை ஒரு பரிகாரம் என்ற கருத்து நேர்மையானதல்ல. பசுவைக் கொன்று செருப்புத் தானம் செய்வதற்கும் இதற்கும் வேறுபாடுகிடையாது.

சூழ்நிலைகளிலுள்ள பலமாநிலங்கள் கள்ளுக்கடைகளைத் திறந்துவைத்துக் கொண்டிருப்பதும், இங்குள்ளவர்கள் பெரும் செலவு செய்துகொண்டு எல்லை தாண்டிச் சென்று இனிய மதுரஸம் பருகிவருகிருர்களென்பதும், எல்லைதாண்டிச் செல்லும் செல்வத்தை இங்கேயே தடுத்து நிறுத்தினுலாவது பயன்படுமே என்ற வாதமும் விதண்டாவாதமேயாகும்.

இப்பொழுதும் கள்ளத்தனமாக மதுவருந்துவோர் லட்சக்கணக்கில் இருக்கிருர்கள் என்ற உண்மை, மதுவிலக்குச் சட்டத்தை நன்ருக அமுல்படுத்தாத அரசாங்க வலிவின்மைக்குத்தான் சான்ருக இருக்குமேயன்றி மீண்டும் கள்ளுக்கடைகளை திறப்பதற்குரிய நியாயமாகி விடாது.

பொருளாதார அரசியல் சூழ்நிலையில் இந்தத் தீமையைத் தடுத்து நிறுத்திவிட முடியாவிட்டாலும், காந்தியடிகள் ஏற்படுத்திய தார்மீக உணர்ச்சியை மக்களிடை பரப்புவதன் மூலமே இதற்குப் பரிகாரம் காணமுடியும். கள்ளுக்கடை வந்தாலும், குடியின் தீமையைப் பற்றிய பிரசாரங்களுக்கு இடம் இருக்கிறது. உலகம் உருண்டை என்பதுதான் இறுதியான உண்மையோ!

# கந்தருவகானம்

*பி.ஸ்ரீ ஆச்சார்யா அவர்கள், கந்தருவகானம் கவிதைத் தொகுப்பைப்பற்றிசுதேசமித்திரன் 1971, ஏப்ரல் 20 தேதி இதழில் எழுதியுள்ள விமர்சனம் இங்கு தரப்படுகிறது.*

முரசு ஒரு காத தூரம் கேட்கும் என்றும், இடி முழக்கம் ஒரு யோசனை தூரம் கேட்கும் என்றும், ஆனால் 'கொடுத்தார்' என்னும் சொல் அடுக்கிய மூவுலகும் கேட்குமே என்றும் நாலடியாரில் ஒரு பாட்டு நமக்குத் தெரிவிக்கிறது. "எடுத்தார்" என்று சொல்லாமல் "கொடுத்தார்" என்று மெல்லச் சொன்னாலும் அந்த கொடை அடுக்கடுக்காய் உள்ள மூன்று லோகங்களிலும் முரசுபோல் முழங்குகிறதாம்! கவிதையும் அப்படித் தான். கவிஞனைப் போல் வேறொரு கொடையாளியோ வள்ளலோ இருக்க முடியுமா? உண்மைக் கொடையாளி, உத்தமக் கொடையாளி, நிகரற்ற கொடையாளி தன் இதய கானத்தை அள்ளிப் பொழிந்து கொடுக்கும் கவிஞன் தான். ஆனால் இத்தகைய கவிஞரை அபூர்வமாகத் தான் உலகம் காண்கிறது. கண்டு பிடிக்கிறது.

திருலோக சீதாராமை நான் பல ஆண்டுகளாக அறிந்திருக்கிறேன். இவர் கவிஞர் என்பதையும் சில ஆண்டுகளாக தெரிந்து கொண்டிருக்கிறேன். பாரதியாரின் வெண்கலமணிக் குரலைக் கேட்டிருக்கும் நான், திருலோகசீதாராமரின் வாயிலாகக் கவிமுரசுமுழங்குவதையும், கவிதை மின்னல் மின்னி இடிப்பதையும் கேட்டதுண்டு. முதலில் முழக்கம்தான் அதிகமோ என்று மயங்கியதும் உண்டு அந்த மயக்கத்திலே "திருலோக சீதாராமா? திரிலோகங்களும் அதிரப் பாடுவாரே!" என்று நண்பர்களிடம் கிண்டலாகப் பேசியதும் உண்டு. நாளடைவில் தான் கண்டு பிடித்தேன் கவிஞர் திருலோக சீதாராமை — முழக்கம்போல், கவிதைக்குரிய நாப் பழக்கமும் உள்ளவர் என்று.

குறி சொல்லும்போது, உதடும் நாவும் துடிப்பதாகவும், "சொல்லு, சொல்லு" என்று குறளி தொண்டைக்குள்ளிருந்து இடிப்பதாகவும், திருக்குற்றாலக் குறவஞ்சியில் படித்திருக்கிறேன். பாரதியாரின் குரலையும் அப்படி இடித்து அவரைக் கவிதை கொட்டும் காளமேகமாகச் செய்தது என்றும் அறிந்திருக்கிறேன். அந்தக் குறளி வித்தை திருலோக சீதாராமுக்கும் பழக்கம்தான் என்பதைக் "கந்தருவ கானம்" என்ற இந்த கவிதைத் தொகுப்பு எனக்குப் புலப்படுத்திவிட்டது. பாரதி தோற்றுவித்த மறுமலர்ச்சியில் தோன்றிய புதுமைக் கவிஞர்கள் பெரும்பாலும் பாரதியின் நிழலிலே மறைந்திருக்கிறார்கள். இதை இப்புத்தகத்தின் முகப்பிலே நினைவூட்டுகிறார் ஸ்ரீ டி. என். ராமச்சந்திரன் "ஆசார வாசல்" என்ற தலைப்பில் தாம் எழுதியுள்ள அணிந்துரையிலே. இந்த அணிந்துரையை இக்கவிஞரின் இதய கானத்திற்கு ஒரு தக்க திறனாய்வுரை என்றே சொல்லலாம். இவர் இக்கவிஞரைத் தமக்கெனத் தமிழ்க் கவி உலகில் உரியதொரு தனி இடம் பெற்றிருப்பதாக கூறி உதாரணம் காட்டுகிறார். ஒப்புக் கொள்ளுகிறேன். இதற்கு நானும் ஓர் உதாரணமாக 10.ம் பக்கத்தில் 'வேட்டை' வருணனையைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

[ 196-ம் பக்கம் பார்க்க ]

# எனது பழைய நினைவுகள் (15)

—கோவை அ. அய்யாமுத்து

## கோவையில் இரண்டாண்டுகள்

கோவை ஜெயில் ரோடிலே எங்கள் கடையருகே மகாகணபதி கமர்சியல் இன்ஸ்டிடியூட் என்றொரு ஸ்தாபனம் இருந்தது.

அதனை கணபதி அய்யர், கிருஷ்ணய்யர் எனும் இரண்டு சகோதரர்கள் நடத்தி வந்தனர்.

அதில் ஆங்கில டைப் ரைட்டிங், சுருக்கெழுத்து, வர்த்தக கணக்கு ஆகியவை போதிக்கப்பட்டன.

எனக்குச் சமயம் வாய்த்த போதெல்லாம் அங்கே சென்று டைப் ரைட்டிங் பயிற்சி பெற்றிருந்தேன்.

சென்னையிலிருந்து திரும்பிய பின் அங்கு ஒரு நாள் வீற்றிருக்கையில் இராமசாமிக் கோனர் என்ற எனது நண்பர் அங்கு வந்தார்.

அவர் விரும்பியவாறு அவருடன் சென்றேன்.

டபுள்யூ எ. ஸ்டீபன்ஸ், பார் - அட் - லா என்பவர் கோவை செசன்ஸ் கோர்ட்டில் பப்ளிக் பிராசிகியூட்டராக இருந்தார்.

ராமசாமிக் கோனர் அந்த பாரிஸ்டரின் குமாஸ்தா.

அவர் கேட்டுக்கொண்டதின் பேரில் நான், அன்று முழுவதும் பாரிஸ்டர் பங்களாவில் தங்கி, சில தஸ்தாவேஜுகளுக்கு நகல் எடுத்துக் (டைப் அடித்து) கொடுத்தேன்.

அன்று மாலை என் கையில் பத்து ரூபாய் கொடுக்கப்பட்டது.

என்ன, ஒரு நாள் வேலைக்குப் பத்து ரூபாயா என்றேன்.

கவலைப்படாதே, கட்சிக்காரர்கள் பணம் என்றார் அவர்.

எனக்கென்ன கவலை? ஜாம் ஜாமென்று அடுத்த நாளும் பாரிஸ்டர் பங்களா சென்றேன்.

முந்திய நாளைப்போல் அல்லாது, பேன்ட், கோட், டை, காலர், பூட்ஸ், கேப் சகிதம் டிப் டாப்பாகச் சென்றிருந்தேன்.

குட் மார்னிங் சார்! என்று பாரிஸ்டருக்கு ஒரு சல்யூட் அடித்தேன். அருகிலிருந்த ராமசாமிக் கோனர் என்னை ஸ்டீபன்ஸ் துரைக்கு — ஆமாம் அவர் அசல் வெள்ளைக்காரர் — அறிமுகம் செய்து வைத்தார்.

பாரிஸ்டர் பங்களாவுக்கும் செசன்ஸ் கோர்ட்டுக்கும் சில கெஜ தூரமே இருந்தது.

பாரிஸ்டர் கோர்ட்டுக்கு கால்நடையாகவே புறப்பட்டார்.

அவருடைய கௌனை எடுத்து நான் தோளில் போட்டுக் கொண்டு, சட்ட புஸ்தகங்கள் சிலவற்றை கையில் தாங்கிய வண்ணமாய் பாரிஸ்டரைப் பின்தொடர்ந்தேன்.

ராமசாமிக் கோனரைச் சூழ்ந்து பல கட்சிக்காரர்களும் இந்த ஊர்வலத்தில் கலந்து கொண்டனர்.

நான் வக்கீலாக வேண்டும் என்ற எண்ணம் அன்று பலித்து விட்டதாகவே எண்ணிக் கொண்டு கம்பீரமாக நடந்து சென்றேன்.

அடடா, நான் அன்று ஐந்தரை அடி உயரம் வளர்ந்து, மீசையும் முளைத்து, பி. ஏ. பி. எல். என்று நான்கெழுத்துக்

களும் பெற்றிருந்தால் — என் ஜன்மமே சாபல்யமாகி யிருக்கும்.

அன்று செசன்ஸ் கோர்ட்டிலே ஒரு கொலைக் கேஸ் விசாரணை நடந்தது.

கச்சேரி மண்டபம் நிறைய வக்கீல் களும், குமாஸ்தாக்களும் நிறைந்திருந் தனர்.

கோர்ட்டு அறைக்கு வெளியே தாழ் வாரங்களிலும் கட்சிக்காரர்களும், சாட்சி சொல்ல வந்தவர்களும் சூழ்ந்திருந்தனர்.

வக்கீல்கள் மகாராஜாதி ராஜாக்கள் போல் முன்னே நடந்து வருவதும், அவர் களைப் பின் தொடர்ந்து குடிபடைகள் போன்று கட்சிக்காரர்கள் வருவதும், பார்ப் பதற்கு கம்பீரமாக இருந்தது.

இந்தக் கம்பீரத்தைக் கண்டு நான் அன்று அடைந்த மயக்கம் செப்பத்தர மன்று.

வக்கீல்கள் நாராயண சாஸ்திரி, பாரி ஸ்டர் நரசய்யா, கணபதி சாஸ்திரி, அய் யாசாமி சாஸ்திரி, சாம்பசிவ சாஸ்திரி, வெங்கட்ரமண அய்யங்கார், சம்பந்த முதலியார், வேணு கோபால் பிள்ளை, கோபால் பிள்ளை, என். எஸ். .ராமசாமி அய்யங்கார் போன்ற பலர் அக்காலத்தில் கோவையில் பிரபல்யமான வக்கீல்கள்.

அன்று கோர்ட்டிலே நடைபெற்ற வழக்கு விசாரணையும், சாட்சிகளை வக்கீல் கள் கேள்விகள் கேட்டதும், எதிர்தரப்பு வக்கீல்களின் குறுக்குக் கேள்விகளும், சாட்சிகள் அளித்த பதில்களும், வக்கீல் களின் வாதமும், எதிர் வாதமும் எல்லாம் எனக்கு விசித்திர அனுபவங்களாக இருந் தன.

நாடோறும் கோர்ட்டுக்குச் சென்று இந்த வேடிக்கையைக் காண வேண்டு மென்ற ஆவலும் உதித்தது.

## ஸ்பென்சர் அண்டு கம்பெனி

கோவை இங்கிலீஷ் கிளபுக்கு எதிர்ப் புறம் ஸ்ரீ என். எஸ். இராமசாமி அய்யங் காருக்குச் சொந்தமான ஒரு கட்டிடத்தில் ஸ்பென்சர் கம்பெனி வியாபார ஸ்தலம் இருந்தது. அக்கம்பெனியில் அனேகமாக வெள்ளைக்காரர்கள் தான் வாடிக்கையாள ராக இருந்தனர்.

ஸ்பென்சர் கம்பெனியின் மானேஜர் பெர்சி ஷா சிம்ஸன் என்பவர் ஒரு பிரமச் சாரி. பாரிஸ்டர் ஸ்டீபன்சும் ஒரு பிரமச் சாரி.

இருவரும் நெருங்கிய நண்பர்கள்.

ஒரு நாள் சிம்ஸன் என்னை கொஞ்சம் டைப் அடிப்பதற்காக அனுப்பும்படி பாரிஸ்டரிடம் கேட்டார்.

நான் சென்றேன்.

அங்கே ஒரு "ஆலிவர்" டைப் ரைட் டர் தூசும் துருவும் பிடித்துக் கிடந்தது. அதை மகா கணபதி இன்ஸிடியூட்டுக்கு எடுத்துச் சென்று "ஓவரால்" செய்து, திருப்பிக் கொணர்ந்து டைப் செய்து கொடுத்தேன்.

சிம்ஸனுக்கு என்னை விட்டுவிடப் பிரியம் இல்லை. எனக்கும் அந்த சூழ்நிலை பிடித்தது.

ஒரு மாதம் சென்றதும் என் கையிலே முப்பது ரூபாய் கொடுத்து, சம்பளப் பட்டி யலில் கையெழுத்திடும்படியாகச் சொன் னார் அக்கம்பெனியின் தலைமைக் குமாஸ் தாவான துரைசாமி என்பவர்.

சம்பளப் பட்டியலில் என் பெயருக்கு நேராக ரூபாய் பதினைந்துதான் சம்பள மாக எழுதப்பட்டிருந்தது.

என்ன அய்யா! என்றேன்.

நீர் புதிது எல்லாம் போகப் போகத் தெரியும் என்றார் அவர்.

சென்னையிலிருந்து சரக்குகள் வரும் கள்ளிப் பெட்டிகளை விற்று, அந்தத் தொகையைக் கணக்கில் காட்டாமல் இப்படி சம்பளம் இரட்டிப்பாகக் கொடுக் கப்படுகிறது என்று சாவதானமாக என்னி டம் விளக்கினார் லூர்துசாமி யென்ற கணக்கர்.

ஸ்பென்சர் கம்பெனியில் மாதம் முப்பதினுயிரம் ரூபாயுக்கு விற்பனையாகி யிருக்கலாம். ஒரு லட்சம் ரூபாய் மதிப்புள்ள சரக்குகள் கைவசமிருந்திருக்கலாம். ஆனால் ஸ்டாக் புஸ்தகம் வைக்கப்படவில்லை!

எல்லாச் சரக்கும் சென்னை தலைமை ஸ்தலத்திலிருந்து அனுப்பப்பட்டது. அன்றுடம் விற்பனைத் தொகை பாங்கில் செலுத்தப்பட்டது.

மானேஜர் சிம்ஸன் தினம் ஓயாது விஸ்கி குடித்துக் கொண்டே இருப்பார். வருகிற போகிற வெள்ளைக்காரர்களுக்கும் அவர் இலவசமாக தமது அறையினுள் வழங்குவார். ஆனால் அதற்குக் காசோ, கணக்கோ கிடையாது. குடிப்பதையெல்லாம் வியாபாரச் செலவு என்று சீட்டெழுதி கையெழுத்திட்டுக் கொடுத்து விடுவார். அல்லது உடைந்து போனது என்று குறிப்பிட்டுக் கொடுப்பார். மாதா மாதம் ஆப்காரி இன்ஸ்பெக்டர் மதுபான வகைகளின் வரவு — செலவு இருப்புத் தணிக்கை செய்ய வருவார். அந்தக் கணக்கைச் சரிக்கட்டுவதற்குத்தான் இந்த சீட்டுகள். இல்லாவிட்டால் அதுவும் இராது.

சிம்ஸன் துரை ஸ்பென்சர் கம்பெனி கட்டிடத்தின் ஒரு பகுதியில் குடியிருந்து வந்தார்.

அவருடைய சமையற்காரன் முனுசாமிக்குத் தினம் இரண்டு ரூபாய் கொடுப்பார். அவன் துரைக்கு காலையில் டீ, எட்டு மணிக்கு பிரேக் பாஸ்ட், மத்தியானம் ஒரு மணிக்கு லஞ்ச், பிற்பகல் டீ, இரவு டின்னர் இந்த இரண்டு ரூபாயில் செய்து கொடுத்து விடுவான்.

துரைக்கு வேண்டிய ரொட்டி, பால், சகலமும் அந்த இரண்டு ரூபாயுக்குள் அடக்கம்.

ஆனால் சர்க்கரை, டீ, காபி, கோகோ, சோடா, பேக்கன், பிஸ்கட், டின்களில் வரும் ஜாம், மார்மலேடு, குவேக்கர் ஓட்ஸ், வர்மிசிலி, சேகோ, மாவு முதலியவை ஸ்பென்சரிலிருந்து யாதொரு கணக்கும் வழக்கும் இல்லாமல் முனுசாமியின் சமையலறைக்கு சிம்ஸன் அனுப்பி விடுவார்.

அன்றுடம் ரொக்க வியாபாரம் நடக்கும். மாத வாடிக்கைகாரர்களுக்கு கடனுகவும் கொடுக்கப்படும். சில சமயம் வால்பாரை எஸ்டேட் வாசிகளுக்கு வி. பி. பி. மூலமாகவும் பார்சல்கள் அனுப்பப்படும். இந்த வி. பி.களுக்கு ஒரு பட்டியல் போட்டு, அதை ஒரு கம்பியில் கோர்த்து துரைசாமி தனது மேஜைக்குள் வைத்துக் கொள்வார். அது எந்தக் குறிப்பிலும், பதிவு செய்யப்படமாட்டாது.

வி. பி. மணியார்டர்கள் பகல் ஒரு மணி சுமாருக்கு தபால்காரரால் கொண்டு வரப்படும். அப்போது இடைவேளை. எல்லோரும் சாப்பாட்டுக்குப் போயிருப்பார்கள். துரைசாமி மட்டும் உள்ளே இருப்பார். வி.பி. மணியார்டர்களை அரைக் கண் மயக்கத்திலிருக்கும் மானேஜரிடம் கொண்டு போய் கையெழுத்து வாங்கி வந்து விடுவார்.

வந்த மணியார்டர்களில் ஒன்றிரண்டைத் தமது பாக்கெட்டில் போட்டுக் கொண்டு, சம்பந்தப்பட்ட பட்டியலைக் கிழித்தெறிந்து விடுவார். இரண்டொன்றுக்கு வி. பி. விற்பனை என்பதாக ரொக்கப் பட்டியல் போட்டு அன்று மாலை மானேஜரிடம் கையெழுத்து வாங்கி விடுவார்.

பாவம் சிம்ஸனுக்கு எத்தனை வி. பி. மணியார்டர்களில் அன்று பகல் கையெழுத்துப் போட்டோம் என்ற கவனம் இராது.

ஸ்பென்சர் கம்பெனி காம்பவுண்டிற்குள் ஸ்பென்சர் சோடா பாக்டரி இருந்தது. அங்கே மிஸ்டர் லவகா என்ற ஆங்கிலோ இந்தியர் மானேஜராக வேலை பார்த்திருந்தார்.

சோடா, கலர்கள், உற்பத்திக்கு வேண்டிய கியாஸ் சிலிண்டர், சர்க்கரை,

கலரிங், யெசன்சுகள் முதலியன லவகா வின் சார்ஜில் இருக்கும். அதற்கும் சரி யான கணக்கு வழக்குகள் கிடையாது. சோடா புட்டிகள் ஒன்று உடைந்தால் அதனோடு நான்கு புட்டிகள் மாயமாய் மறைந்து விடும்.

சோடா பாக்டரி வேலைக்கு பக்கத்து கிராமங்களிலிருந்து ஆண்களும், பெண்க ளும் வேலைக்கு வருவார்கள். அவர்களில் ஒரு "நல்ல" பெண்ணைத் தேர்ந்தெடுத்து சிம்ஸன் வீட்டு வேலைக்கு லவகா அனுப்பி வைத்து அவரது நன்மதிப்புக்குப் பாத்திர ராய் விளங்கி வந்தார்.

பெட்ரோலும் ஸ்பென்சர் கம்பெனியில் விற்கப்பட்டது. பி. ஓ. சி. கம்பெனியார் இரண்டு காலன் டின்களில் கொண்டு வந்து சப்ளை செய்வார்கள். அதை வைப்ப தற்கு தனி "பங்" இருந்தது. சில டின்கள் உண்மையாகவே கசிந்தொழுகும். சில பொய்யொழுக்கத்தில் சேரும். பி. ஓ சி. கம்பெனியார் லீக்கேஜுக்கென்று கொஞ் சம் தள்ளுபடி செய்வார்கள். அந்த ஆதா யம் ஸ்பென்சர் கணக்கில் சேராது.

யாராவது ஒருவன் — ஸ்பென்சர் சேல்ஸ்மெனின் கையாள் — உள்ளே வந்து ஒரு பாட்டில் மெத்திலேட் டட் ஸ்பிரிட் கேட்பான். அதன் விலை ஆறணு இருக்கும். குறிப்பிட்ட சேல்ஸ் மென் உள்ளே சென்று ஒரு பாட்டில் வுஸ்கியை கடுதாசில் சுற்றிக் கொணர்ந்து கொடுத்து விட்டு, ஸ்பிரிட்டுக்குப் பில் போட்டுப் பணம் பெற்றுத் துரைசாமி யிடம் கொடுப்பான்.

இந்தப் படியாக எத்தனையோ அற் புதங்கள் அங்கு அநுதினமும் நிகழ்ந்து கொண்டிருந்தன.

அவற்றை யெல்லாம் "செர்லாக் ஓம்ஸ்" வேலை செய்து, ஆராய்ந்து தெரிந்து கொண்டேன்.

யாரிடம் இதைப் பற்றி யெல்லாம் தெரிவிப்பது?

பி. சி. சிம்ஸனுடைய மாமனோ, யாரோ நெருங்கிய சொந்தக்காரர் ஸ்பென் சர் கம்பெனியின் டைரக்டர்களில் ஒருவர் என்று கேள்விப்பட்டேன். எனவே சிம்ஸன் அக்கம்பெனியின் நம்பிக்கைக்கு பாத்திரப்பட்ட செல்லப் பிள்ளையாக இருந் தார்.

நல்ல வேளையாக சிம்ஸன் லீவெடுத் துக் கொண்டு இங்கிலாந்துக்கு கிளம் பினர்.

அவருக்குப் பதிலாக கேலியர் (GALIER) என்ற மற்றொரு பிரமச்சாரி வந்து சேர்ந்தார்.

கேலியரோடு, சென்னைத் தலைமை யகத்திலிருந்து இராமசாமி அய்யர் என்ற தணிக்கையாளரும் உடன் வந்து சேர்ந்தார்.

அடுத்த நாளே லவகா எஸன்ஸ் புட்டிகளுடன் வெளியேறும்போது கையுங் களவுமாய்ப் பிடித்து இராமசாமி அய்யரி டம் ஒப்புவித்தேன்.

லவகா வேலையை ராஜினமா செய்து விட்டுக் குன்னூர் போய்ச் சேர்ந்தான்.

சரக்குகள் வி. பி.யில் அனுப்பப்பட்ட வுடனே வி. பி. கணக்கில் பற்றெழுதிக் குறிப்பிலும், பேரெட்டிலும் தாக்கலாகு மாறு திட்டப்படுத்தினேன்.

வருவாய் குறைந்து போகவே துரை சாமியும் இராஜினமா செய்து விட்டுத் தமதூருக்குக் கம்பி நீட்டினர்.

அவருக்குப் பதிலாக சென்னையி லிருந்து டேவிட் என்பவர் வந்து சேர்ந் தார். லவகாவுக்குப் பதிலாகவும் ஒருவன் சென்னையிலிருந்து வந்தான்.

ஒரு குரோஸ் கலர் பானம் தயாரிக்க எவ்வளவு எசன்ஸ், எவ்வளவு கலரிங், எவ்வளவு ஆசிட், எவ்வளவு சர்க்கரை பிடிக்குமெனத் திட்டப்படுத்தி, அன்றாடக் கணக்குகள் ஒழுங்காகப் பதிவு செய்யப் பட்டது.

# “ ஹொய்ஸள ”

— P. S. V. சுப்ரமண்யன்

1970-இன் இறுதியில் மைசூர் இராஜ்ஜியத்தில் “ஹொய்ஸள சகாப்தம்” (Hoysala Millenerium) ஒரு விழாவாகக் கொண்டாடப்பட்டது. அக்காலத்தில் கருநாடகதேசத்தை ஆண்ட பல அரச வம்சங்களில் “ஹொய்ஸள” வமிசமும் ஒன்று. சாளுக்கிய வம்சத்தினர் சுமார் 700 ஆண்டுகளும், ஹொய்ஸள வமிசத்தினர் சுமார் 300 ஆண்டுகளும் இந் நாட்டை ஆண்டனர். ஹொய்ஸள வம்சம் தோன்றிய விதம் ஒரு சுவையான, விநோதமான கதை. சாதாரண மனிதன் ஒருவன் தன் தைரியத்தாலும், பலத்தாலும், திட சங்கல்பத்தாலும் ஒரு நாட்டையே ஆளும் அளவுக்கு உயர்ந்து விட்டான் என்றால் அது வியக்கத் தக்கது தானே!

தற்போதைய மைசூர் நாட்டின் “சிக்மகளூர்” ஜில்லாவில் “அங்கடி” என்ற ஒரு சின்ன ஊர் உளது. முன் காலத்தில் அது “ஸஸகபுரம்” என்ற பெயரால் அழைக்கப்பட்டு வந்தது. அவ்வூரின் எல்லையில் துஷ்ட வன விலங்குகள் வாழும் காட்டுப் பிரதேசம் இருந்தது. ஊருக்கு வெளியே ஒரு ஜைன தேவாலயம் இருந்தது. அதற்கு “வாஸந்திகாதேவி கோயில்” என்று பெயர். அங்கு “சுதத்த முனி” என்ற அந்தணன் வசித்து வந்தான். அவன் மிகுந்த அறிவாளியாகவும் நல்லொழுக்கமுள்ளவனாகவும் இருந்தான். அவன் ஜனங்களுக்கு தர்ம போதனைகள் செய்து வந்தான்.

அந்தக் காலத்தில் ‘ஸளன்’ என்ற ஒரு யௌவன வேடன் அவ்வனப் பிரதேசத்தில் வசித்து வந்தான். அவன் நல்ல பலிஷ்டன். சூரன், வேட்டையாடுவதில் வல்லவன்; அவன் கைதான் ஓங்கியிருக்கும். அவன் வாசந்திகாதேவிகோயிலுக்கு அவ்வப்போது வருவதும் சுதத்த முனியின் போதனைகளை மனம் ஊன்றிக் கேட்பதுமுண்டு. சுதத்த முனியும் அவனிடம் மிக்க அன்பு பூண்டிருந்தான்.

ஒரு நாள் சுதத்தமுனி தன் சீடர்களுக்கு தர்ம போதனைகள் நிகழ்த்திக் கொண்டிருந்த சமயம் திடீரென்று ஒரு கர்ஜனை கேட்டது. வந்தது புலி. அதைக் கண்டதும் பலர் சிதறி ஓடினர். சிலர் செய்வதறியாமல் கல்லாய் அமர்ந்திருந்தனர். சுதத்தமுனியின் பார்வை அங்கு நின்ற ஸளன் மேல்பட்டது. அவர் அருகாமையில் இருந்த ஈட்டி ஒன்றும் அவர் கண்ணில் பட்டது. சமயோசிதராய் அந்த ஈட்டியை எடுத்து அவன் பக்கலில் எறிந்து “ஹொய் ஸள” என்று ஆஞ்ஞாபித்தார். “ஹொய் ஸள” என்றால் “ஸளனே, கொல்” என்று பொருள்.

குருவின் வார்த்தையை ஆணையாகக் கொண்ட ஸளன் கலவரமடையாமல், அதைத் தட்டவும்மாட்டாமல், தைரியத்துடன் புலியை எதிர்க்கத் தயாரானான். புலி முன்னேக்கி வந்துகொண்டிருந்தது. ஸளனைக் கண்ட அது, பதுங்கிப் பாயத் தயாரானது. ஸளனும் ஈட்டியைத் தயாராக்கி வைத்துக்கொண்டான். புலி ஸளன் மேல் பாய்வதற்கும், ஸளன் ஈட்டி கொண்டு அதைத் தாக்கவும் சரியாயிற்று. ஈட்டி பாய்ந்ததும் புலி தடுமாறி அவன் உடலை நகங்களால் கிழித்தது. ஸளன் ஈட்டியை நன்றாக அதன் உடலில் செலுத்தி அதன் குரல்வளையை தன் பலத்த கையினால் அமுக்கி நெறித்தான். தன் உடலினின்றும் கிழிந்தோடும் குருதியைக் கண்டு அவன் அஞ்சவில்லை; மனம் தளரவுமில்லை. வேதனை தாளாமல் புலி இறந்து தரையில் சாய்ந்தது,

ஸளனின் இந்த சூரத்தனத்தைக் கண்ட சுதத்தமுனி மெய்சிலிர்த்து, மெச்சினூர். "ஸளனே, நீ சூரன்; பராக்கிரமசாலி. நீ ஒரு அரசனுயிருக்கத் தகுதியுடையவன். நீ ஒரு புது இராஜ்ஜியத்தைத் தோற்றுவிப்பாயாக," என்று ஆஞ்ஞாபித்து ஆசீர்வதித்தார். சுதத்தமுனியின் கட்டளைகளை நிறைவேற்றத் தவருத ஸளன் "அப்படியே செய்கிறேன்" என்று அவரை வணங்கி விடைபெற்றுன்.

ஸளன் முதலில் ஒரு படையை அமைத்தான். அதன் உதவியுடன் முதலில் ஸஸகபுரத்தின் சுற்றுமுற்றிலிருந்த சிறிய சிறிய ஊர்களையெல்லாம் தன் வசப்படுத்திக்கொண்டான். போகப் போக, பெரிய பெரிய பிரதேசங்களையும் ஜெயித்து ஒரு புதிய இராஜ்ஜியத்தை ஏற்படுத்தினுன். அதற்குத் தன் குரு தனக்கு இட்ட கட்டளையான "ஹொய்ஸள" என்ற வாசகத்தையே பெயராகவைத்தான். இதுதான் ஹொய்ஸள வம்சம் தோன்றிய விருத்தாந்தம்; மூலம்.

தற்காலந்திய "ஹளேபிடு" என்னும் ஊர் அக்காலத்தில் "த்வார சமுத்திரம்" என்று அழைக்கப்பட்டுவந்தது. அதுவே ஹொய்ஸள மன்னர்களின் ராஜதானியாயிருந்தது: ஹொய்ஸளர்கள் வீர, தீர, பராக்கிரமசாலிகளாய் இருந்ததோடு, சிற்பம், சங்கீதம் முதலாய நுண்கலைகளை ஆதரித்துவந்தனர். ஹளேபிடுவிலுள்ள கோயில்களையும், பேலூரில் "சென்னகேசவர்" கோவிலையும் அவர்களே கட்டுவித்தனர். சென்னகேசவர் கோயிலின் சிற்பக்கலை ஒரு கண்கொள்ளாக்காட்சி. மைசூருக்கும் வரும் யாத்திரிகர்களும், உல்லாசப் பிரயாணிகளும் அதைக் காணுமற் போவதில்லை.

இவ்வாறு வெறும் வேடனுயிருந்த ஒருவன், கீர்த்தி வாய்ந்த ஒரு புது, பெரிய ராஜ்ஜியத்தையே நிர்மாணித்து ஆண்டான் என்ருல் அது போற்றற்குரியது தானே!

எத்தனையோ விஷயங்களை விழாவாகக் கொண்டாடுகிறோம். அந்தரீதியில், உழைப்பால் உயர்ந்த ஒரு மனிதனை நினைவுகூறும் வகையில் "ஹொய்ஸள ஸஹாப்த"த்தை மைசூரில் கொண்டாடியது மிகப் பொருத்தமே.

# " Gogitation on Good and Evil "

— T. R. Kuppuswami

The concepts of Good and evil appear relative. There does not seem to be an absolute good as there cannot be an absolute evil. That was once supposed to be good and acceptable has to-day become an evil. Truly has Lord Tennyson said:

" The old order changeth yielding place to new, And God fulfils Himself in many ways lest one good custom should corrupt the world "

But is it correct to state that good and evil are merely relative? Is there not an absolute good? The Commandments of the Holy Bible, the Truth as Lord Buddha realized in his enlightenment, the teachings of Lord Krishna as we find in " The Song Celestial ", - are not these beyond question, absolute good?

Communism is penetrating far and wide. If a people do not embrace it wholly, they are prone to acceptance of a few of its teachings. Disrespect for the past, for traditions and culture and religion is spreading its tentacles. Old and new ideas clash. The man in the street fails to understand the right from the wrong, good from evil, light from darkness. Everything is in the melting pot. We may consider this state of affairs as those of a transition period.

Youth clamours for change while Age hugs the past fast. Who is right and who is not?

One thing is clear. Change is the Law of Life. Life should change if it should not perish. Change involves discarding one and adopting another. The old is rung out and the new is rung in. In the midst of this dynamism it is indeed hard to put your finger on one and say without fear of contradiction that is good.

The touchstone of Good is Utility, Prosperity and Peace. The greatest number strike us to be the criterion. As life advances, it should cast off worn out habits and assume whatever contributes to the greatest happiness to the largest number.

We have Change; we have Diversity. The deep - sighted will not miss the Unity amidst Change. Good persists amidst Evil. Truth persists amidst Falsehood. Light persists amidst Darkness. Life persist amidst death. Good persists amidst Evil. In the final analysis Good and Evil are seen to be but the two sides of the same coin.

Let us therefore learn to adapt our selves to constant change without tears for what is discarded, and without bitterness and suspicion against what is new and novel.

Man is endowed with instincts. As he has his being and growth in Society, his instinctive inclinations or tendencies get modified to suit changing circumstances. Individual proclivities are curbed and canalised by correct education and training. At any stage in life we may point to a thing and call it good if it is productive of maximum happiness. Whatever blocks our way and are preventing the smoothness of life is evil.

### Tendencies and Proclivities

Tendencies are usually good whether they be held in common or by particular persons. Thirst for popularity or fame, ambition to rise high in social status, in office and in wealth, love of rhythm, lilt, colour, size and shape and taste, - all these which feed our aesthetic sense, hunger for expansion of the mental horizon with curiosity serving as a goad, love of orderly living, quest for things of higher value, - all these are desirable tendencies. At the same time man possesses, individually, a land eollectively proclivities, which, if allowed to go unchecked will bring about ruination of body, mind and soul. 'Vaulting' ambition, greed. jealousy, spirit of revenge, vitriolic outbursts, bellicosity, deceitfulness, saddism and vandalism, - these too activise the human breast. Education, to be worthy of its name, has to play its significant part here. It has to canalise human energy into beds of flowers and useful fruits, without allowing it to itself amidst briars and thorns. Even the minor weaknesses like the love of flattery and show, love of one self in print or in the record, blind love of the past, looking askance at anything new and strange, to be polygamous and sexy, to be ungrateful, to follow the line of least resistance, love of quick money and fast living, - these and like have to be kept under eternal vigilance and check; otherwise they will land us in unbalanced life and perdition.

Cogitation yields Fundamentals as well as Relatives, the Wholly good and partially good. While no one need dispute the former, we have to exercise guarded control over the latter and modify them from time to time. This can be effected only through correct Education and Training.

---

தேவதரிசனம் :

## உபநிஷத்

உபநிஷத் பாத்திரங்கள் நம் முயற்சிக்கு உருவகங்கள்.
நம் எண்ணத்தின் ரூபமே உபநிஷத் பாத்திரமாக விளங்குவதைக் காண்கிறோம்.
வேதரிஷிகள் நம் பாதையையே காட்டுகிறார்கள்.
ஆகவே உபநிஷத்தைப் படிக்குங்காலத்தில் அவை பரிசயமானதாகவே தோன்றுகின்றன.
பழைய விஷயத்தை நினைவுபடுத்திக்கொள்ளுகின்ற பாங்கில் நாம் உபநிஷத்தைப் படிக்கிறோம்.
உபநிஷத் காலம் நம் காலம்.

# கந்தருவகானம்

— திருலோகசீதாராம்

# Gandarvaganam

— By. T. N. Ramachandran

… … … ‘ வாழியுரு வின்றி
அருவமாய் நின்றாய் ! அழையேற் குறு துணையாய் !
வந்த வழி மறந்தேன், வண்ணச் சிற கெனக்குத்
தந்ததுவும் நீயோ தயவுடையாய்’ … …
… … … ‘ சற்றிதுகேள்
எண்ணம்போல் யாவும் இயற்று மெழில் கவிதை
மண்ணில் பலகாலம் மா தவமாய்ச் செய்ததனால்
ஊனில் உயிர் ஊசல் ஓங்கி உணர் வெழுந்து
வானின் வியப்பை வடித்தாய் வளர் இன்பம்
கொட்டிக்கிடக்கின்ற கோதில் உலகிதனிற்
கட்டியமுதுண்ணும் கந்தருவன் ஆனாய் நீ;

… .. Be blessed
O Thou sans form, Help great to me the caller
The way I trod I clean forgot, is it Thou
O merciful one, that gavest me the gorgeous wings?

… … … Just to this listen :
Poetry that createth all things at will
Was by thee on earth perfomed
As tapas great for a long time
So it was, the surge of thy life in thy body
Upward rose and woke the soul
That did distil Heavenly Wonder
So a Ghandarv now you are
Who can quaff nectar sweet
In the paragon land blemishless
Where delights abound and ever increase.

---

Line 57.

In a similar way poet Bharathi is invested with wings in the Ghandarv land.

Line 59.

The qnintessential message of Kowsheethaki Brahmnopanishad is conveyed here in elegant poetry. A three - fold process of living sublimates man's life on earth. The bodily existence is gradually elevated to tho mental plane by physio - mental training, which in turn by perfection of mental discipline is uplifted to athmic (soul's) beatitude. Poetry that is mundane, is the creatioa of mainly the physical faculty. When it is made to undergo a spiritual pilgrimage, it emerges phoenix like Manasarovas (The Grand lake of the Mind). Hence divine afflatus lifts it beyond the supra-mental to the realm of ananda — the region of bliss and beatitude. In this perfect perfection poetry is the WORD ITSELF and it is creative at will.

Line 61.

Tapas is to be achieved.

" … … … … By dreadful abstinence
And conquering penance of the mutinous flesh
Deep contemplation and unwearied study
In years outstretched beyond the date of man "

*- Hellas, Shelly.*

The tapas of a poet is elsewhere described by our poet thus.

" What though we add, multiply, subtract or divide
The sum remains, analysis of agony
Let us ostracise and move our finger in writing
Let this literature be, this will suffice and this our tapas is ".

*The Canopy of Renown.*

Line 66.

Nectar sweet is ananda personified.

Lines 67-68.

" Ths Region of Bliss and Beatitude "

வானுலகின் இன்ப வளங்கள் இனி யுனக்குத்
தேனாய் இனிக்கத் தெவிட்டா மயல் தருவாள்
கந்தருவ மன்னன் கடைக்குட்டி; நீயவள் தன்
சொந்த மணவாள னாகிச் சுகம் பெறுக’

தந்தத்துக் கதவந் தைத்த
தரளவெண் திட்டி வாசல்
முந்துற வாய்தி றக்க
முழுநிலாச் சிந்து கின்ற
சுந்தர மீன்கள் துள்ளித்
துவண்டெழு நடைப யின்றே
அந்தரத் தாதி மார்கள்
அணிவகுத் தெதிரே வந்தார்

திகைப்புடன் வியப்பும் காட்டும்
தெருவினில் மதிற் புறத்தே
வகையறி யாது நிற்கும்
வறியனா மென்பால் நண்ணி
நகைமுக மின்னார் இன்ப
நாயக வருக வென்றார்
மிகையுறும் உணர்வு பொங்க
மெய்சிலிர்த் திட்டே னம்மா

[ தொடரும் ]

The abundance of heavenly delights
For you to taste as nectar sweet, she the daughter (70)
Youngest of the Gandharv King 'll pour
And steep you in sensuous love that never stales,
You shall her spouse become and blessed be.

With pearl and pearly ivory
Was the wicket door inlaid (71)
As its mouth, it oped ajar
Many a luminous skyey star
From the realm of Dian afar
Looked as if to amble forth
In serried rank and nimble gait (80)
Thus the heavenly hand-maidens.

At the street without the fort
A wonder great of surprise wrought —
All forlorn poor me did stand,
Unto me the damsels came (86)
The laughing light - nymphs of sky
And hailed me great as Spouse grand;
Boundless joy in me welled up
And all athrill I stood there still.

[ To be Continued ]

---

Line 69

The abundance of heavenly delights that one can taste is theme of Rupert Brooke's sonnet, a portion of which flows as follows.

" Spend in pure converse our eternal day;
Think each in each, immediately wise;
Learn all we lacked before; hear, know, and say
What this tumultous body now denies,
And feel, who have laid our groping hands away;
And see, no longer blinded by our eyes ".

*Rupert Brooke, Sonnet.*

Line 72. Cf.

" Age cannot wither her, nor custom stale
Her infinite variety; other women cloy
The appetites they feed, but she makes hungry
Where most she satisfied , "

*Shakespeare, Antony and Cleopatra.*

Notes on lines 74 & 75.

" In my father's house are many mansions ". New Teatament, John XIV, 2. And mansions must hsve doors as well as gates. Milton also speaks of the ever-during gates of Heaven which move on golden hinges. (Paradise Lost, Book VII; Lines 205-207).

Lines 77 to 81.

Paradise appears to be wrought of appropriate climate and abundant love. It also comprises.

" Gardens and vineyards
Damsels with swelling breasts of suitable age
And a brimming cup "

*Mahomet, Sara, 78.*

Line 84.

It is the street and not the fort that holds within itself surprise and wonder.

*தொடர் : 5*

# ஸ்ரீ ஜெயதேவரின் கீதகோவிந்தம்

தமிழில் : கி. பக்ஷிராஜன்

ஸர்க்கம் 5. 11-வது அஷ்டபதி

*இங்ஙனம் கண்ணன் நிலையைக்கூறி*
*"கண்ணன் இருக்கும் கொடிமனைக்குச்செல்"*
*என்று ராதையைத் தோழி தூண்டல்.*

---

பல்லவி : கடிதட அழகி! காம இன்பத்தின்
முதலதுவாம் குறியிடத்தே
அடைதரும் அனங்கன்போல் உளம் கவர் உன்
இதய நாயகன்தனை அடைவாய்.

---

1. இடையினில் விளம்பனம் செய்திடேல் மென்கால்
வீசிடும் யமுனையின் கூலத்(து)
அடவியில் கோபிகள் முலைஅணைந் தசைதரும்
இணைகரத் துளவினன் இருப்பான்
[பல்லவி]

2. உன்பெயர் குறியிடம் இவைகளைக் குறித்திடும்
இசைதரு குழலினை ஊதும்
உன்உடல் தனையணைந் தெறிதரு காலது
கொணர்ந்துதிர் பொடிமிகப் போற்றும்
[பல்லவி]

3. புட்செல அசைஇலை ஒலிஉன வரவெனும்
சங்கையில் நீவரு வழியை
உட்பர பரப்புடன் கூடிய நோக்குடன்
பார்த்திடும் பாயலை ஆக்கும்
[பல்லவி]

4. பகைஎனக் கலவியில் அசைந்துமெல் லொலிசெயும்
சிலம்பினைத் துரந்திடு பாங்கீ!
மிகைஇருள் வீங்கிய கொடிமனை நோக்கிநீ
இரும் படம் போர்த்தனை போதி
[பல்லவி]

5. மேற்கொளும் கலவியில் முரண்பட அசைதரும்
பகநிரைக் கீழ் ஒளிர்முகில்போல்
ஏற்புடை மாலையின் தூய்அகல் கண்ணனின்
நிறத்தொளிர்வாய் பொன்னி மின்போல்
[பல்லவி]

6. அம்புய நயனி! உன் மேகலை அற்(று) உடை
நழுவியதாய் அற்ற மற்றே
இன்பினின் முன்முதல் அல்குலை நிதியென
இன் தளிப் பாயலில் ஏற்பான்
[பல்லவி]

7. முடிவினைக் கிட்டிடும் இரவிது கண்ணனே
மானி என்மொழிவழி ஒழுகு
கடிதினில் செயல்படு மாறுசெல் கண்ணனின்
ஆசையை நிறைவுசெய் ராதே! [பல்லவி]

8. அரிஅடி யான்சய தேவர்மிக் கழகுறச்
சொல் பொழுதே அருளாளன்
புரியநல் வினைஎன விழைவுறு மாயனை
உளமகிழ் வுடன் பணிவீரே [பல்லவி]

---

1. அடிக்கடிபெரு மூச்சினை விடுவன் முன்
திசை அடிக்கடி நோக்கும்
அடிக்கடி கொடிவீட் டினில்புலம் புடன்
புகும் அடிக்கடி வாடும்
அடிக்கடி படுத்திடும்மிகக் கலங்கிய
அகத்தினனுய்த் தோன்றும்
அடிக்கடி அழகீஉன தன்பனும்
அனங்கனுல் வாடுகிருன்.

2. ஆதவன் உனதகந்தையினேே(டு) இதோ
அறமறைந்தான் அழகீ
மாதவன் தனதாசை யினேேடிருள்
மண்டியதால் நேமி
மாதுயர்க்குரல் ஒப்பஎன் வேண்டலும்
நீண்டுள(து) ஆதலினுல்
போதலுக்குரி காலம்ஈ(து) அழகிது
பயனிலை தாழ்ச்சியுமே.

3. அன்பினர்க் குறித்தலைந்து பின்கூடியர்
உரைகொடு தெரிவர் அணைந்தே
பின்புதம்நகக் குறியினர் மதவெறி
துரிதமும் எய்தி இணைந்தே
பின்மெய் இன்புறத்தொடுத்தபின் நிறைவுறப்
பெறுமிரு காதலர் தமக்கும்
மன்னும் உட்குடன் கூடியே இன்புறும்
எச்செயல் இன்பிலதாகும்.

4. இன்முகத் தாய்இருள் உளபொழுதேவழி
தன்னிலே அஞ்சி நடுக்கம்
மன்னிடு நோக்கினை வீசினளாய்
மரந்தோறும் அடிக்கடி தங்கிப்
பின்மெதுவாய் அடிவைத்தனை தனியிடம்
அரிதினில் சேர்வளாய் இன்பம்
துன்னிடும் அலைஎறி உந்தனைநோக்கும்அக்
கண்ணனும் பேற்றினன் ஆக.

5. அழகிய ராதையின் முகக்கமலத்தளி
மூவுல காண்மை முடிக்கணியாம்
விழுமிய நீல்மணி நிருப்பொறைக்(கு) அந்தகன்
போன்று தன்னிச்சையில் மேன்மைவிடுத்(து)
இழிதரத் தோன்றினன் கோபியர் மகிழ்வினுக்கே
பிரதோட நல்வேளை ஒப்பான்
பழியுடைக் கஞ்சொழிப்பில் புகைக்கொடிஎனும்
தேவகி மகன்உமைக் காத்திடுக.

[ வளரும் ]

பயிலும் சுடரொளி மூர்த்தியை பங்கயக் கண்ணனை
பயில வினிய நம்பாற்கடல் சேர்ந்த பரமனை
பயிலும் திருவுடையா ரெவரேனு மவர் கண்டீர்
பயிலும் பிறப்பிடை தோறெம்மை யாளும் பரமரே !

இந்த தத்துவம் அறிந்த இவர் இங்கு அவனைச் சேர்ந்தார் தனக்கு 'இனியர்' என்கின்றார். அவன் இனியரானபோது அவனைச் சேர்ந்தாரும் இனியராகின்றார், அவ்வினிமைதானும் கரும்பினின் சாறு போல கீழே செல்லச்செல்ல அதிகரித்து வருமே. இதையறிந்த நம் கவி தொடங்கு முன்னே தன்னை "நாயகன் தன்னடியை நேர்பட்ட தொண்டர் தொண்டர், தொண்டர் தொண்டன் சடகோபன்" என்று முடி சூடிக் கொண்டார். அடியாரடியார்தம், அடியாரடியார் தமக்கு, அடியாரடியார்தம் அடியாரடியோங்களே என்றார். தம் ஸ்வரூபத்தை நிலை நிறுத்தியபோது, அவனடியார்க்கு ஆட்செய்யும் பெரும் பேற்றை கணிசிக்க, "தொண்டன், தொண்டன்" என்று பெருமை கொள்ளுகிறார். என்னே! இவருக்கு அடியார் தொண்டிலிருக்கும் ஆர்வம் தான்! இத்தை தலைக்கொண்ட இவர் வேறு பேறு பெறினும் வேண்டாவென்கிறார். தொண்டின் இனிமையை அனுபவித்தவர் வேறொன்றில் மனந் தாழ்ப்பரோ ?

உறுமோ பாவி யேனுக்கு இவ்வுலக மூன்றும் உடன் நிறைப
சிறுமா மேனி நிமிர்த்த என செந்தாமரைக்கண் திருக்குறளன்
நறுமா விரை நாண மலரடிக்கீழ் புகுதலின்றி அவனடியார்
சிறுமா மனிசராய் என்னை யாண்டார் இங்கே திரியவே !

அவனுடைய அனுபவத்திலும் தொண்டிலும் அவன் ஒருவனே உத்தேசமாயிருக்கும் அவனடியார் திறத்துச் செய்யும் கைங்கர்யத்தில் உவப்பு அவனதும் அவன் அடியார்களது மாயிறே பெருகும். தன் திறத்துச் செய்யும் தொண்டிலும் பேரற இனியராயிருப்பது தன்னடியார் திறத்துச் செய்யும் தொண்டில்



மறைந்திருந்து சுவைக்கும் இன்பத்தில் சுவை அதிகமன்றோ! தனித்தேட்டையும் தவிர்ந்து தன்னொடொப்பார் பலரோடும் கூடினால் இன்பம் வெள்ளமெடுத்துப் பெருகத் தட்டென் ? சுவை யுண்பாரோடு அதைக் கண்டு ஆநந்திப்பாரும் கூடயிருக்கப்பெற்றால் அச்சுவை தானும் பலபடியாகாதோ ?

தனிமாப் புகழே யெஞ்ஞான்றும் நிற்கும்படியாய்த் தான்தோன்றி
முனிமாப் பிரம முதல்வித்தாய் உலகமூன்றும் முளைப்பித்த
தனிமாத் தெய்வத் தனி ரடிக் கீழ் புகுதலன்றி அவனடியார்
நனிமாக் கலவி நாளும் வாய்க்க நங்கட்கே !

அவனுடைய தொண்டில் நம் விருப்பமும் குறிக்கோளும் நிறைவேறுகின்றன. அவனடியார் தொண்டில் அவன் விருப்பமும் காரியமும் நிறைவேறுகிறது. அவன் விருப்பந்தானே நம் சத்தையும் குறிக்கோளும். "தனக்கேயாகி எனைக் கொள்ளுமீதே கண்ணனை யான் கொள்சிறப்பே" என்றாரே நம்கவி. நமக்கு சிறப்பு அவன் தொண்டிலும் அவனடியார் தொண்டே. அவன் தொண்டில் ஓர் குறையுண்டு. நம் தொண்டை அவன் உகந்தானையென்பது சந்தேகம். அடியார் தொண்டில் இந்த குறைபாடு வராது. நேருக்கு நேர் அவர் ஆணையைத் தெரிந்து அதன் பிரகாரமும் தெரிந்து தொண்டாற்றலாமே. குறைபாடுகள் நேர்படுமாயின் அதையும் திருத்திப் பணி கொள்ளுவாரே! இதையே நம் கவி போற்றுகிறார். வேண்டுகிறார்.

வாய்க்க தமியேற் கூழி தோறூழி – மாகாயாம்
பூக்கொள் மேனி நான்கு தோள் பொன்னாழிக்கை என்னம்மான்
நீக்க வில்லா வடியார் தம்மடியாரடியார டியாரெங்
சோக்கன் அவர்க்கே குடிகளாய்ச் செல்லும் நல்ல கோட்பாடே !

சோக்கன் – அவர்க்கே குடிகளாய்ச் செல்லும் நல்ல கோட்பாடே. ஆகையால் வாழ்க்கையின் பயனே. அடியார்கட்கு அன்புடன் தொண்டுபுரிவதே.

அதற்காகவே நம் ஸ்வரூபம் அவனிட்ட வழக்காய்க் கிடக்க வேண்டிய சரீரம்போல் திகழவேண்டிய தாயிற்று. அவன் சொத்தை அவனுடைய உறவினர்க்கல்லாது வேறு யார்க்கு ஆட்படுத்த முடியும்? இப்படி அவனடியார்க்கு ஆக்காதபோது பூரணமான அவன் சொத்தாக ஆகாதே!

அவன் அடியார் திறத்துச் செய்யும் அன்பான தொண்டுதானே இவன் குறிக்கோள். இதைத் தானே அவனும் பேரஉகப்பது. அவ்வாருயின் உலகோர் அனைவரும் ஏன் அத்தொண்டில் ஈடுபடாது திகைக்கின்றனர்? அதற்கு முக்கிய காரணம் அறியாமையே. உண்மை நிலையை அறிந்தார்களாயின் இவர்களும் அத்தொண்டிலே மண்டியிருப்பர். ஆனுல் என்றும் அழியாத ஆத்ம சம்பந்தத்தை மறைத்து வைக்கிறது சரீர சம்பந்தம். ஏழேழ் பிறவிக்கும் ஒழிக்க முடியாத உறவை க்ஷணத்துக்கு க்ஷணம் மாறக்கூடிய இந்த அல்பமான தேக சம்பந்தம் மறக்கும்படி செய்கிறது. இந்த அறியாமையை அகற்றினல் உண்மையான தொண்டில் ஈடுபடத் தட்டென்? இதை அகற்ற முற்படுகிருர் நம்கவி. இரண்டு சம்பத்திலுமுள்ளாவற்றுமையை விளக்குகிருர்.

துணையும் சார்வுமாகுவார் போல சுற்றத்தவர் பிறரும்
அணைய வந்து வாக்க முண்டேல் அட்டைதள் போல் சுவைப்பர்
கணையொன்ருலே யேழ் மரமுமெய்த எம்கார்முகிலை
புணை யென்று மாயப் போகிலல்யில் இல்லை கண்டீர் பொருளே!

கொண்ட பெண்டிற் மக்கள் உற்ருர்; சுற்றத்தவர் பிறரும் இவனை யண்டி நின்று பொருள் கையுண்டாய் செல்லக் காணில் போற்றி ஏற்றி தொழுது நின்று இருள் கொள் துன்பத்து "என்னே" என்று கூட சொல்லுவாரில்லாராய்த் தவிக்கவிடுவர். இந்த துக்கம் நிறைந்த துன்பம் மலிந்த கதையையே புராணங்கள்



இதிஹாசங்கள், காவ்யங்கள் ஓலமிடுகின்றன! பிரஹ்லாதன், சுக்கிரீவன், விபீஷணன், பாண்டவர், திரௌபதி, ஜயந்தன் முதலானேர் எத்துணைபேர் இந்த சரீர சம்பந்தத்தால் இடருண்டனர். இவர்களைக் காத்தவன்தான் யார்? "தாயும் தந்தையுமாய் வாழ மீசன் மணிவண்ணன் எந்தையே" அவன்தானே நம் உயிர்க்குயிராய் உடன் உறைபவன் அவனிலும் உற்ற நண்பன் யார்? உடன் நின்று உற்றவிடத்து உதவும் உறவினன் யார்? இந்த அவலமான தேகப்பற்றை விடவே உயிர்க்குயிரின் பற்று திடமாகும். இந்த சரீரப் பற்றைப் பற்றி நிற்பவர் தொடர்பும் விட்டுப் போம். அவன் அடியார் திறத்து அன்பும். உறவும் பலமடையும். உலகமே அவன் வடிவமாக விளங்கும். அப்போது அவன் அன்பே, அருளே பிரயோஜனமான தொண்டு வாய்க்கப் பெறும். நாமும் நம்முடைமையும் நிறம் பெறும்.

கண்ண லல்லா லில்லை கண்டீர் காணது நிற்க வந்து
மண்ணின் பாரம் நீக்குதற்கே வட மதுரைப் பிறந்தான்
திண்ண மாலும் முடைமை யுண்டே லவனடி சேர்த்துய்மினே
எண்ண வேண்டா நும்மதாலும் வனற்றி மற்றில்லையே!

இவ்வுறுதியில்லையாகில், தாம் கோலின துணையெல்லாம் வெறும் பாரமாய், துன்பமாய் அநர்த்தமாய்ப் போகும். இதில் ஒரு சம்சயமுமில்லை. "காது செய்வான் கூதை செய்து, கடை முறை வாழ்க்கையும் போம்" என்கிருர் நம் கவி.

அவனே எல்லாவித பந்துவுமாவான் என்று திர்ந்த பின்பு அவ்வித உறவினர்களுக்குச் செய்ய வேண்டிய எல்லாவித பரிவு, உபசாரம், கைங்கர்ய மெல்லாவற்வற்றையும் அவன் திறத்தே பண்ண அமையுமே. அந்தவிதமான எல்லாப் பரிமாற்றத்தையும் ஆசைப்பட்டு அதை அப்போதே பெறவேணுமென்று விரை

கிருர். அவனடிமையே பரமப் பிரயோஜனமாகக் கொண்ட குடிகுடி வழிவந்த அடியோர்களுக்கு அவர்கள் குறிக்கோளாகக் கொண்ட அடிமையை அவனே செய்வித்துக் கொள்ள வேணுமென்று பிரார்த்திக்கிருர். இனி பலத்தில் இவருக்கு தவரையுண்டாயிற்று.

கொடுவினைப் படைகள் வல்லையாய் அமர்க்கிடர்கெட அசுரர்
கடுவினை நெஞ்சே! என்னுடை யமுதே! கலியயல் திருப்
புளிங்குடியாய்
வடிவினை யிலவே மலர் மகள் மற்றை நிலமகள் பிடிக்கும்
மெல்லடிமை
கொடுவினை யேனும் பிடிக்க நீ யொருநாள் கூவுதல் வருதல்
செய்யவே!

அவனுடைய திருவடிகளில் அந்தரங்கமான தொண்டு ஆற்ற தன்னை ஒருநாள் அங்கே அழைத்துக் கொள்ளவோ அல்லது இங்கேயே எழுந்தருளுவதோ செய்ய வேணுமென்று இரக்கிருர். இவர் இப்படி அபேக்ஷிக்க "அவன்" தனக்கும் இவருக்குமுள்ள குடல்துவத்சைக் காட்டியருளி ஆதரித்து இவரும் அவன் அந்தராத்மாவாயிருக்கும் இருப்பைக் கண்டு அவனுடைய சில குணத்தை அனுபவிக்கிருர். இவர் கார்யத்துக்கும் அவனன்றே அபேக்ஷிக்க வேண்டியவன்.

அவனே அசல் ஞாலம் படைத் திடந்தான்
அவனே யஃதுண்டுமிழ்ந் தாளந்தான்
அவனே அவனும் அவனு மவனும்
அவனே மற்றெல்லாமும் அறிந்தனமே!

எல்லா சேதன சுசேதநங்களெல்லாம் அவன் அதீனமே, தானும் அவனிட்ட வழக்கன்றே? தனக்கும் அந்தராத்மாவாய் நிற்கும் நீர்மையைக் கண்டு அவனைக் கூசாதே அணுகி அடிமை செய்ய இதொன்றே போராதேயென்று அந்த சீலத்தில் கால் தாழ்ந்தார் இவர் அவன் குணத்தில் ஈடுபடவே இவரிலும் விடாய்த்த இந்திரியங்கள் அவனைக் காண



வேணுமென்று நோவுபடா நின்றன. முன்பு, ஒரு இந்திரியஞ் செய்யும் வியர்பாரத்தை வேறு இந்திரியங்களும் செய்ய ஆசைப்பட்டன. ஒரு 'இந்திரியத்தைக் கொண்டு எல்லா இந்திரியங்கள் செய்யும் அனுபவத்தையும் பெற வேண்டும்படியாயிற்று இவருக்கு இந்த விடாய். இன்று தனித்தனியே காரணங்களும் விடாய்த்துத் தாமும் விடாய்த்தார். இந்திரியங்கள்கிரமத்தைத் தவிர்ந்திருந்தன முன்பு. இப்போது அவன் கிரமத்தைத் தவிர்ந்தான். இவர் விடாய் அறிந்து அதற்குக் கிரமத்திலே வந்து தோற்றுவோம் என்று ஆறியிராதே தனியேவந்து தோன்றிஞப் போலே வந்து முகங்காட்டிஞன். இந்தப் பேற்றை அனுசந்தித்து இனியராகிருர்.

உகந்தே உன்னை உள்ளும் என்றுள்ளத்து அகப்பால்
அகந்தா னமர்ந்தே இடங் கொண்ட அமலா
மிகுந்தா னவன் மார்வகலம் இரு கூரு
நகந்தாய் நரசிங்கம தாய உருவே.
கண்டு கொண்டு என் கண்ணிணை யாரக் களித்து
பண்டை வினையாயின பற்ருேடறுத்து
தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்
அண்டத் தமரர் பெருமான் அடியேனே!

இவர் அவனைக் காண வேணுமென்று ஆசைப்பட அவன் வந்து முகங் காட்ட பின்புள்ளார் சதிரே வாய்க்கப் பெற்ருர்கள். இவர் அனுபவம் நமக்கு அமுதமாயிற்று. அவனைக் கொண்டு கடல் கடைந்து அமுதம் பெற்ற தேவர், அதைக் கொண்டு உடல் நலம் பேணினர். இவரைக் கொண்டு பாலோடமுதென்ன ஆயிரமும் பெற்று ஆராவமுதனையும் பெற்ருேம் நாம். அதோடல்லாமல் நாமும் வானேர்க்கு ஆராவதமாஞேம். அவன் திறத்துச் செய்யும் ஓர் கைங்கர்யத்தின் ஏற்றந்தான் என்னே! இவர் செய்யும் சொல்பணியின் மேன்மைதான் என்னே! அதுவைகுந்தம் ஏற்றுவிக்கும். இது ஊரெல்லாம் வைகுந்தமாக்குவிக்கும். தொண்டென்ருல் இவ்விதம் எல்லோர்க்கும், உலகிற்கும்

நன்மை பயப்பனவாக யிருத்தல் வேண்டும், ஏன்? மூவுலகங்களுக்குமே நன்மை உண்டாக்குவதாயிருத்தல் வேண்டும் என்கிருர் நம் கவி.

இவர் திருவேங்கடமுடையானை சரணம் புக்க பின்பு, அவனை அடைவதற்கு விரோதமானவைகளின் ஸ்வருபத்தை விளக்கி, அவைகளைப் போக்கிக்கொள்ள வேண்டிய விதங்களையும் பரக்கப் பேசாநின்ருர். பிறகு விரோதி வர்க்கங்கள் அடைவும் நசிக்கவே, நாம் இட்டுப் பிறந்த கைங்கர்யத்திலே ருசிஉண்டாய், அந்த கைங்கர்யங்களும் பரிபூரணமான நிலையை, அவனடியார் திறத்துப் பண்ணும் தொண்டிலேயே அடைந்து நிறம் பெறுகுகிற படியையும் தெளிவாக்கியருளினுர். இவருக்கு காயிகமான தொண்டு கிடைக்கப் பெருததினுல் வாசிகமான தொனியில் ஈடுபட்டார். இவருடைய தொண்டுதான் உலகத்தாரது போலல்லாது "தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள்" சொல்லுவதேயாயிற்று. இதில் இன்ப (அனுபவ)மும் தொண்டும் ஒன்றேயாய் இணைந்து நிற்கும் உலகோர் திறத்தோ அனுபவம் தலையெடுக்கும்போது தொண்டின் திறம் குறைந்தும், தொண்டில் ஈடுபட்டிருக்கும்போது அனுபவம் தவிர்ந்தும் நிற்கும். இவரது தொண்டில் அவன் திறத்துப் பண்ணும்குணுனுபவமும் தலையெடுக்க யெடுக்க தொண்டு சொன் மாலைகளின் சீர்மை மேன்மாலாக பெருகியே நிற்கும். குணுனுபவ கீர்த்தனமே இவருக்குத் தொண்டாயிற்று, குணங்களுக்கு ஊற்றுக்கண் அவன் இருப்பே யாயிற்று. ஆனபடியால் அவன் திருவுருவமும் கை நழுவினவாறே கலங்கி நோவுபடுகிருர். குணங்களிலும் வடிவழகில் இவருக்கு ஈடுபாடு அதிகம். மேலும் இவருக்கு நாட்டாரோபாதி உண்டு உடுத்தி லோகப் பொருள்களைப் பார்த்து ஆறியிருக்கும் இயல்பு கிடையாதே. குணங்



களையும் வடிவழகையும் மண்டி அனுபவித்து அனுபவித்து பிச்சேறினவனுக்கு போலே எங்கே பார்த்தாலும் உலகம் அவன் குண கீர்த்தனமாயும் அவன் திருவுருவை நினைவூட்டுவனவாக மிருந்தது. அவனை ஒழிய உலகம் ஏது? அது அவனை காட்டிக்கொண்டு நின்றது இவருக்கு. சாதரிக்கைக்கு ஓர் விரகில்லை. பிரிந்து நோவுபடுவார்க்கு புணர்ச்சி (கலவி)யும் இல்லையாய் மறந்து பிழைக்கவும் வழியற்றதாயிற்று.

"அன்றெருக்கால் வைய மளந்த பிரான் வாரானென்று
ஒன்றெருக்கால் சொல்லாது உலகோ உறங்குமே"

என்று முன்பு பரிதவித்தார். அந்த உலகமும் இப்போது விழித்திருந்து இவரை நலியாநின்றன. என்ன மாறுபாடு தான்?

உயிர்க்கது காலனென்று மமையா னிகத் தேற்கும்
குயில் பைதல்காள்! கண்ணன் நாமமே குழறிக் கொன்றீர்
தயிர் பழம் சோற்றெடு பாலடிசிலும் தந்து – சொல்
பயிற்றிய நல் வளமூட்டி நீர் புண் புடையீரே!

ஆறுதலுக்கு இட்டுப் பிறந்தவைகளே. நோவு மிசைக்கு உடலாயிற்று. இவைகளை விட்டுத் தேறுதல் எங்ஙனே? ஆகவே இவருக்கு இழை நல்ல வாக்கையும் பையவே புயக்கற்றது" என்ற தசை வந்தெய்தியது. இந்த ஆபத்தான நிலையிலிருப்பார் முன்பு தானிருந்த இருப்பில் ஒரு கண்ணேட்டம் செலுத்துவதுண்டு. முன்பிருந்த செல்வத்துக்கும் இப்போதிருக்கும் மெலிவுக்கும் தொடர்பு காண விரும்பும் சாபலம். அப்படியே இவரும் முன்பு தானும் அவனுமிருந்த இருப்பை நினைக்கிருர். அதிலே தேன் துளிக்கலாயிற்று.

"வாரிக் கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்று
ஆர்வுற்றென்னை யொழிய வென்னில் முன்னம் பாசித்து
தானென்னை முற்றப்படுகிருன்,
காரொக்கும் காட்கரையப்பன் கடியனே"

இந்த நினைவால் வந்த பிரீதி இவர் தரிக்கைக்கு உடலாயிற்று. தரித்தாலும் ஆற்றுமையே விஞ்சி தூது விடத் துணிகிறார். தன் அழகாலும் குணங்களாலும் இவரைத் தோற்பித்து அடிமையாக எழுதிக் கொண்டவனுக்கு தன்னுடைய நிலைமையை அவனுக்கு விண்ணப்பஞ் செய்து தன் கார்யந் தலைக்கட்டி வைக்க வேணுமென்று பக்ஷிகளை இரக்கிறார்.

எங்கான வகங் கழி வாயிரை தேர்ந்திங் கினிதமரும
லகங் கான மட நாராய் திருமுழிக் களத்துறையும்
கொங்கார் பூந்துழாய் முடியெங் குடக்கூத்தர் கென் தூதாய்
நுங்கால்கள் என் தலைவரேலே செழுமீ ரோறும ரோடே !

இப்படி தூதுவிட்டும் அவன் வராமையாலே தாமே அவனிருக்கும் இடம் போகத் துணிந்தார். தானடையவிருக்கும் பேறு பெறுமளவும் ஆறியிருக்க வொண்ணுதே. தன் வாழ்க்கையின் குறிக் கோளை அடையத் துடிக்கிறார் என்னே யென்று !

எவை கொல் அணுகப் பெறு நாள் என்றெப் போதும்
கவையில் மனமின்றிக் கண்ணீர் கள் கலுழ்வன்
நவையில் திருநாரணன் சேர் திரு நாவாய்
அவையுள் புகலாவது ஓர் நாள் அறியேனே !

தான் ஆசைப்பட்டவுடனே அவனை பெருமையாலே திருவாய்ப் பாடியிலுள்ளார் கண்ணனைப் பிரிந்து ஒரு மாலை பொழுதுபட்ட நோவெல்லாம் இவர் ஒருத்தருமே படா நின்றார்.

"பாவியேன் மனத்தே நின்றிடுமாலே மாடை தண் வாடை
வெம்மாடையாயே
மேவு தண்மதியம் வெம்மதியமாலோ மென்மலர் பள்ளி
வெம்பள்ளியாலோ
தாவியம் புள்ளாடைத் தெய்வ வண்டு துதைந்த எம்
பெண்மையம் பூவிதாலோ
ஆவியின் பரமல்ல வகைகளாலோ யாமுடை நெஞ்சமும்
துணையன்றலோ."



இவர் படும் பாட்டைக் கண்டு மனம் பொறுஞய் திருக்கண்ணபுரத்திலே வந்து முகங்காட்டியருளி "உம்மைப்பெறுகைக்கு நாமன்றோ மனோரதம் பண்ண வேண்டும். இழிவு நம்மதன்றோ" என்று அருளிச் செய்ய, அத்தைக் கேட்டு இனியராய் 'நானேல் அறியேன் எனக்குள்ளன' என்று இவர் பணிவிக்க 'அவனும்' சரணமாகும் தனதானடைந்தார்க்கெல்லாம், மரணமானல் வைகுந்தம் கொடுக்கும்" என்று அறுதியிட, அந்த உறுதியிலே பேராவும் பிரீதராய் "இனி நமக்குப் பேற்றில் தட்டில்லை" என்று கொண்டு தன்னுடைய தொண்டிலே த்வரிக்கிறார். தான் கற்றதை பிறருக்கு ஓதாதபோது தரியாரே !"

மாலை நண்ணித் தொழு தெழுமினே வினைகெட
காலை மாலை கமல மலரிட்டு நீர்
வேலை மோதும் மதின் சூழ் திருக்ண்ணபுரத்து
ஆலின் மேலாலமர்ந்தான் அடியிணைகளே !

இவர் படும் பாடுகளை யெல்லாம் பார்க்கும்போது தவநெறிக்கும் தஞ்சநெறிக்கும் வாசியென்னென்று நினைக்கும்படியாயிற்று. தவநெறி செல்வார் புறநெறிகளைக் கட்டி அவனுடைய உணர்வுகொண்டுஉணர்ந்து உலகப் பற்றை சிறிதும் தங்காதபடி விட வேண்டும். பூரணமான தேக சுகம் பெற விரும்புவார் நோய்க்குத் தக்கவாறு மருந்து அருந்தி பத்திய மிருப்பார் போல இவர்கள் அவனை பஜனை செய்ய அமையும். அவனை அடைதற்குபாயமாக தவநெறியைப் பேணுவாரெல்லார்க்கும் அவனே ஆரம்பத்தில் மருந்து போன்று வருந்தப் பயில வேண்டிய தொன்றுயும் அனுபவிக்க அனுபவிக்க சௌகர்யமாயும் சுகமாயும் பரிணமிக்கும். ஆனல் விதியும் முறையும் தவறினல் பலனும் தாமதித்துக் கொண்டே போகும். தஞ்சலாதியால் அடைய வேண்டியவனும் இவன் தன் சுமை நீத்து சுகமே

வர்த்திக்க வமையும். சுமைக் கூலி தன் சுமையை இறக்கிய பின் ‘அம்மே யென்று சாய்ந்திருப்பான் போல் இவரும் அவன் திருவடிகளில் தன் பரத்தை ஸமர்ப்பித்து அம்மே! அப்பா! தாமா! இருன்னு! என்று நிம்மதியான போக்கு வீடாக அறுற்றுகிருர் ஆடுகிருர். இந்த அழைப்பும் அனுபவமும் தான் அடைந்திருக்கும் நிம்மதியின் கார்யம். இவைகளில்லே யேல் தனக்கு சுகமில்லை இருப்புமில்லை யென்னலாம். தன்னைத் தானே சுமக்க வேண்டிய தொல்லையொழிந்த மனம் பின் என்னதான் செய்யும்? உபாயமான அவனை விட்டு உபேயமான அவனை அனுபவிக்கிறது. ஏணி வைத்து ஏணி வாங்குவதுதானே வழக்கம். இரண்டும் அவனே ஆன பின்பு எதை வைத்து எதை வாங்குவது? உபாயம் பரித்த பின்பு அதை விட்டு உபேயத்தை அனுபவிக்கிருர். பக்தியே உபாய மானல் வருந்தப் பயிலவேண்டிய தொன்ருகும். அதுவே அடைந்து அனுபவிக்க வேண்டிய தொன்ருனல் இனிமையாகிறது. இரண்டிடத்தும் பக்தி தானே! ஒன்று சாதனமாயும் மற்றென்று சாத்தியமாயும் — அமைந்தாலும் அதன் ஸ்வரூபம் வேறல்லவே. வேடிக்கைக்கு ஆடினலும் பணயம் வைத்து ஆடினலும் ஆட்டத்தில் அடி தப்பி நடக்க வொண்ணுதே! தவநெறி பின்பற்றினர் அனுஷ்டிக்கும் பக்தியின் பிரகாரமே தஞ்ச நெறி பின்பற்றினர் அனுபவிக்கும் பக்தியின் பரீவாகமும் அழியும். இரண்டிடத்தும் கூடிக் காண்பதும் பாடி யலற்றுவதும், அழுவதும் அழைப்பது மாயே யிருக்கும். ஒன்று பிரிந்த தன்மையை உணர்ந்திருக்கும். மற்றது பிரியமாட்டாத தன்மையை வெளியிடுவது இதுவே வேற்றுமை.

[முற்றும்]

# விளையாட்டு

ஊமம் கலந்து ஊற்றிய பனிநீர்
உயிரின் கடலாய் விரிந்திடக்
காமம் கழன்று கடுவெளி யெங்கும்
கதிரின் திகிரி சுழன்றிட

அழலும் வேகச் சுடரிற் சிந்திய
சூழ்ச்சியில் கோளம் பிறங்குவ
அழலும் கனவில் ஆயிரங் கோடி
ஆருயிர் வடிவம் பேணுவ

குலையா நாதம் குன்ரு ஒளிசேர்
குட்டிச் சிறுகுடில் கட்டியே
நிலையா வாழ்வில் நிலைகாண் பதுவே
நிச்சலும் உயிரின் வழியாக

வில்லிற் சரமழை விதிதொடர் பாக
விளையும் பிறவியொர் விந்தையே
அல்லல் மற்றும் ஆறுதல் என்றே
ஆடும் பகடைக் காயுடன்

சென்று மடங்கும் வரையினில் இங்கு
சிற்சில சிறுகதை நாடகம்
வென்றிப் பெருங்கதை யாக்கிப் பயிலும்
விளையாட் டிதிலேன் சஞ்சலம்?

# தேர்தல்

— G. C. பட்டாபிராம், B.A.

இந்த தேர்தல் முடிவுகளைப்பற்றி நாம் ஆராய்வதற்குமுன் நாம் ஜனநாயக தத்துவங்கள் சிலவற்றைப்பற்றி சிந்திக்க வேண்டும். ஜனநாயகத்தின் அடிப்படை கட்சிகள். ஜனநாயகத்தின் தலைவருக்கும் கட்சி தலைவருக்கும் உள்ள அடிப்படை வேற்றுமைகளை அறிய வேண்டும். ஜனநாயகத்தின் தலைவராகிய பிரதமருக்குத்தான் ஜனநாயகத்தில் முதல் இடம். கட்சித் தலைவர், பிரதமரைவிட முக்கியத்துவம் வாய்ந்தவர் அல்ல. பிரதம மந்திரி பாராளுமன்றத்தின் ஆளும் கட்சித்தலைவர் மட்டும் அல்ல. அவர் சுதந்திரநாட்டின் தலைவரும் கூட. அயல் நாட்டில் இவர் வகுக்கும் கொள்கைளுக்கும், இவருடைய பேச்சுகளுக்கும்தான் முக்கியத்துவம் அளிக்கிறார்கள். பிரதமரை கண்டிக்கும் உரிமை அவரை தங்கள் தலைவராக ஏற்றுக்கொண்டிருக்கும் பாராளுமன்ற உறுப்பினர்களுக்குத்தான் உண்டு. கட்சித் தலைவருக்காவது அல்லது கட்சி காரியக்கமிட்டிக்காவது கிடையாது. கட்சித் தலைவர் பிரதமருக்கும் அவர் சகாக்களுக்கும் கட்டுப்பட்டவரே ஒழிய அவருக்கு சமமானவர் அல்ல. கட்சித் தலைவரும் பிரதமரும் சம அந்தஸ்து உடையவர் என்றால் இரட்டை ஆட்சி (Diarchy) ஆக ஆகிவிடும். இரட்டை ஆட்சி ஜனநாயகத்தின் விரோதி. ஆனால் கம்யூனிஸ்ட் நாடுகளில் கட்சித் தலைவர் தான் முக்கியமானவர். பிரதமர் அவர் சொன்னபடிதான் நடக்க வேண்டும். கட்சிதான் அங்கு அரசாள்வது. இதுதான் ஜனநாயக தத்துவத்திற்கும் கம்யூனிஸத்திற்கும் உள்ள அடிப்படை வித்தியாசம். ஜனநாயகத்தில் மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டவர்களுக்குத்தான் அதிகாரம். கம்யூனிஸ்ட் நாடுகளில் கட்சிக்கும் கட்சித் தலைவர்களுக்கும்தான் அதிகாரம்.

இந்த அடிப்படையில்தான் அமெரிக்காவில் ஜனாதிபதிக்கும் பிரிட்டனில் பிரதமருக்கும் அலாதி மதிப்பு. அங்குள்ள கட்சித் தலைவர்களைப்பற்றி நமக்கு ஒன்றும் தெரிவதில்லை. பிரிட்டனில் கன்ஸர்வேடிவ் கட்சித்தலைவரை சேர்மன் என்றுதான் அழைக்கிறார்கள். பிரதமர் அட்டலி காலத்தில் அவருக்கும் தொழிற் கட்சித் தலைவராகிய லாஸ்கிக்கும் கருத்து வேற்றுமை ஏற்பட்டது. லாஸ்கிதான் பதவியை இழந்தார், அட்லி அல்ல. கட்சியின் வேலை தேர்தலுக்கு முன்னால் கொள்கைகளை வகுக்க வேண்டும். அதை பொது ஜனங்கள் அறியும்படி பிரகடனம் செய்ய வேண்டும். தேர்தல் காலத்தில் தொண்டர்களை நியமித்துதான் கட்சியின் ஜயத்திற்காக பாடுபட வேண்டும். கட்சியின் தேர்தல் கொள்கைகளை எப்படி நிறைவேற்ற வேண்டும் என்பது பாராளுமன்ற உறுப்பினர்களும் பிரதமரும் கவனிக்கவேண்டிய விஷயம். கொள்கைகள் நிறைவேற்றப்படுகிறதா என்று கவனிக்க வேண்டியவர்கள் பாராளுமன்ற உறுப்பினர்களே ஒழிய கட்சித்தலைவர்கள் அல்ல. கட்சியை சார்ந்தவர்கள் பாராளுமன்ற உறுப்பினர் தொகுதிகளில் கூட்டங்கள் கூட்டி பாராளுமன்ற உறுப்பினர்களை பேசும்படி அழைத்து கொள்கைகள் எப்படி நிறைவேறப்படுகிறது என்று பொதுஜனங்கள் அறிவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

இந்த அடிப்படையில் நாம் சமீபத்தில் தேர்தலுக்கு காரணமாக இருந்த கட்சிப் பிளவை பார்க்க வேண்டும். எது கட்சி என்றும் கவனிக்க வேண்டும். நேரு காலத்தில் அவருடைய சொந்த செல்வாக்கால் கட்சித் தலைவர்கள் அவருக்கு அடங்கியே பணிசெய்தனர். கிருபாளினி காலத்திலும், புருஷோத்தமதாஸ் டாண்டன் காலத்தி

லும் நேருவிற்கும் கட்சித் தலைவருக்கும் வேற்றுமை ஏற்பட்டது. நேருவிற்கு எதிராக அவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை. ஆகையால் அவ்விரு தலைவர்களும் பதவியை ராஜினமா செய்ய வேண்டி வந்தது. சாஸ்திரி காலத்தில் அவருக்கும் கட்சித் தலைவருக்கும் கருத்து வேற்றுமை ஆரம்பித்தவுடன் சாஸ்திரி காலமானதால் அது வெளிவரவில்லை. நிதி மந்திரியின் ராஜினமாவை கட்சித் தலைவரைக் கலக்காமல் அங்கீகரித்து ஒரு புது நிதி மந்திரியின் நியமனம்தான் இந்த கருத்து வேற்றுமைக்குக் காரணம். இந்திரா காந்தி காலத்தில்தான் அவர் இதை சமாளிக்க வேண்டிய கட்டம் வந்தது. பாராளுமன்ற கட்சித் தலைமைப் பதவியிலிருக்கும்போதே கட்சித் தலைவர்கள் சம்மதத்தில் இவர் நடப்பார் என்ற ஒரு வதந்தியும் இருந்தது. இந்த வதந்தி நிஜமானல் இது ஜனநாயக பண்பிற்கு புறம்பானது. இந்த பூசலை இந்திரா காந்தி நேர்மையாக சமாளித்து ஜனநாயக கக்கொள்கைகளை நிலைநிறுத்தினர். அமோகமான பொதுஜனவாக்குடன் திரும்பவும் பதவி வகிக்கிறர். நமது நாட்டில் ஜனநாயகத்தின் வெற்றிக்கு இது ஒரு சுப சூசகம்.

தினமணிக் கதிரில் ஸ்ரீ கஸ்தூரிரங்கன் சைன படையெடுப்பிலிருந்து இந்திரா காந்தி காலத்தில் கட்சித் தலைவருக்கும் பிரதமருக்கும் ஏற்பட்ட கருத்து வேற்றுமைவரை ஒரு குறிப்பு எழுதியிருக்கிறர். கட்சித்தலைவர்களுக்கு சாதகமான மனப்பான்மையுடன் அவர் எழுதியிருந்தாலும் அதில் உள்ள குறிப்புகளைப் படித்தால் நாம் கட்சித் தலைவர்களின் நடத்தை ஜனநாயக மரபுகளுக்கு முரணுக இருப்பதை அறியலாம். குல்தீப்நயார் என்பவரும் இதைப்பற்றின விபரங்களை சமீபத்தில் தனது புஸ்தகங்களில்வெளியிட்டிருக்கிறர். அரசியலில் அனுபவம் வாய்ந்தவர்கள் கட்சித் தலைவரின் நடத்தையைக் கொண்டு ஆதரிக்க மாட்டார்கள். கட்சி தலைவர்களின் நடத்தை ஜனநாயகத்திற்குப் புறம்பானது. இந்திராகாந்தி அன்னிய செலாவணியில் ரூபாயின் மதிப்பை குறைத்த போது அப்பொழுது இருந்த காங்கிரஸ் தலைவரைக் கலந்து ஆலோசிக்கவில்லை என்பது கட்சித் தலைவர்களின் குற்றச்சாட்டு. ஏன் கேட்டுச் செய்ய வேண்டும்? இது ரகசியமாகச் செய்ய வேண்டிய விஷயம். பாராளுமன்ற உறுப்பினரையே கலக்க வேண்டியதில்லையே! கட்சித் தலைவர்களை ஏன் கேட்க வேண்டும்? கட்சி தலைவர்களுக்குத் தேர்தல்காலத்தில்தான் வேலை. பிறகு பாராளுமன்ற கட்சித் தலைவர் தேர்தல் முடிந்ததும், அவர்தான் எல்லா அதிகாரத்தையும் ஏற்றுக்கொள்ள வேண்டும். பிரதமர் கட்சித் தலைவரின் தலைமைக் காரியதரிசியல்ல. அவர் கட்சித்தலைவரை தினமும் கலந்து ஆலோசித்து அரசாட்சி பண்ணவேண்டும் என்ற முறை ஜனநாயகத்தில் கிடையாது. கம்யூனிஸ்ட் நாடுகளில்தான் இது நடைபெறுகிறது. இது ஜனநாயக பண்பிற்கு முரண் ஆனது என்பது எல்லோரும் அறிந்த விஷயம். தவிரவும் கட்சித்தலைவர் பாதி காரியக்கமிட்டி மெம்பர்கள் யோஜனையின்பேரில் பாரத பிரதமரை காங்கிரஸ் கட்சியிலிருந்து வெளி அனுப்பியது மிகவும் வருந்த வேண்டிய விஷயம். எந்த நாட்டிலும் இப்படி நடக்காது.

ஜாகிர்ஹுஸெயின் இறந்ததும் யாரை பாரதத்தின் ஜனதிபதியாக நிறுத்துவது என்பது பிரச்னை. உபதலைவராக இருந்த கிரியைத்தான் முறையாக நிறுத்த வேண்டும். இதற்குமுன் இருந்த தலைவர்கள் ராதாகிருஷ்ணனும், ஜாகிர்ஹுஸைனும் உபதலைவர்களாக இருந்தவர்கள். தவிரவும் கிரி பழுத்த காங்கிரஸ்வாதி. வெகு காலமாக காங்கிரஸிற்கு தொண்டு செய்திருக்கிறர். இதையே கட்சித் தலைவர்கள் ஊர்ஜிதப் படுத்தியிருந்தால் இவ்வளவு ரசாபாசமான காரியங்கள் நடந்திருக்காது. இதற்கு

மாருக கட்சித்தலைவர்கள் தங்களுக்கு வேண்டிய சஞ்சீவி ரெட்டியை தேர்ந்தெடுத்தார்கள். இது பிரதமருக்கு பிடிக்கவில்லை. பிரதமருக்கு விரோதமாக கட்சித் தலைவர்கள் நடந்து கொண்டதால் பிரதமர் கட்சித்தலைவர்களுக்கு எதிராக வேலை செய்தார். ஆனால் பிரதமர் முதலில் சஞ்சீவிரெட்டியின் நியமனப் பத்திரத்தில் கையெழுத்துப்போடாமல் கிரியின் நியமன பத்திரத்தில் கையெழுத்துப் போட்டிருக்க வேண்டும். இந்த நாடகத்தில் பிரதமர் செய்த மறுக்க முடியாத குற்றம் இது ஒன்றுதான். பிரதமரின் ஆலோசகராகிய மிஸ்ராவே பிரதமர் இப்படி செய்தது பிசகு என்று சொன்னதாக குல்தீப் நயார் எழுதுகிருர். தைரியமாக முதலில் இருந்தே பிரதமர் கட்சித்தலைவர்களை எதிர்த்து நின்றிருக்க வேண்டும்.

பாரதத்தின் ஜனாதிபதியை தேர்ந்தெடுப்பது, மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பாராளுமன்ற, ராஜ்ய சட்டசபை உறுப்பினர்கள். அவர்களுக்கு கொரடா கொடுக்க வேண்டியது நாட்டின் பிரதமரும், மாகாண முதல்வர்களும். ஆகையால் கட்சித்தலைவர்கள் பிரதமரையும், முதல்வர்களையும் கலந்து ஆலோசித்து செய்ய வேண்டிய காரியம். இந்திரா காந்தியை பாராளுமன்ற கட்சி தலைவராக தேர்ந்தெடுக்கும் பொழுது கட்சித்தலைவர்கள் மாகாண முதல்வர்களை கலந்து ஆலோசித்தார்கள். அதேமுறையை இப்பொழுது கைவிட்டார்கள். ஏனென்ருல் பெரும்பான்மையான மாகாண முதல்வர்களுக்கு சஞ்சீவி ரெட்டியை பிடிக்காது என்பது கட்சித்தலைவர்களுக்குத் தெரியும். அதே சமயத்தில் இந்திராகாந்தி மாகாண முதல்வர்களுடனும், எதிர்கட்சித் தலைவர்களுடனும் இதைப்பற்றி யோசனைகள் நடத்தினர். கட்சித்தலைவர்கள் சொல்படி நாட்டின் பிரதமரும், மாகாண முதல்வர்களும் கொரடா கொடுக்க வேண்டும் என்ற முறை ஜனநாயகப் பண்பிற்கு புறம்பானது. பாரத நாட்டின் பிரதமரும் மாகாண முதல்வர்களும் கட்சித் தலைவர்களின் வாலாட்டங்கள் அல்ல. அவர்கள் எல்லோரும் பொதுஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். ஆனால் இந்திராகாந்தியை எதிர்த்தவர்கள்எல்லோரும் (முரார்ஜிதேசாயைத் தவிர) பொதுத் தேர்தலில் தோற்கடிக்கப்பட்டு தங்கள் சொந்த ஊர்களில் செல்வாக்கு இழந்து, மற்ற மாகாணங்களில் வெகுசிரமத்துடன் நின்று உபதேர்தலில் வெற்றி பெற்றவர்கள்.

கட்சிப் பூசல்கள் ஏற்பட்டதும் நிதி இலாகாவை பிரதமரே ஏற்றுக்கொண்டது முறை அல்ல என்பது கட்சித் தலைவர்களின் குற்றச்சாட்டு. கட்சி வங்கிகளைப் பொதுஉடமை ஆக்கும்படி கட்டளை பிறப்பித்த பிறகு அதை நடத்தும் மந்திரிக்கு அதில் நம்பிக்கை இருக்கவேண்டும். அந்த கொள்கையை ஆரம்பம் முதல் எதிர்த்தவரை வைத்துக்கொண்டு அதை அமுல் நடத்த முடியாது. ஆகையால் அந்த இலாகாவை பிரதமரே வைத்துக் கொண்டது தப்பல்ல. தவிரவும் ஜனநாயக பண்பின்படி எல்லா இலாக்காக்களையும் பிரதமர் இஷ்டப்படி மந்திரிகளுக்கு பங்கீடு செய்யும் உரிமை உண்டு. பிறகு உள்நாட்டிலாகாவை பிரதமர் சவானிடமிருந்து தானே எடுத்துக் கொண்டார். சவானுக்கு நிதி இலாகாவை அளித்தார். இந்த இலாகா மாறுதல் செய்வது பிரதமரின் சொந்தப் பொறுப்பு. கட்சி தலைவர்கள் இதில் குறுக்கிடுவது ஜனநாயக மரபிற்கு விரோதம்.

இந்திரா காந்தி கட்சி பிளவிற்குக் பிறகும் கட்சி ஒன்று பட்டிருக்கும்போதும் கட்சி வகுத்த பொருளாதார திட்டங்களைக் கடைப்பிடித்து அமுலாக்கினர், இதுவரை கொள்கைகள் பெயரளவில் இருந்தன. வங்கிகளை பொதுவுடைமை ஆக்குவதும், ராஜமானியங்களை நிறுத்துவதும், காங்கிரஸ் கட்சியின் கொள்கைகளே. அவைகள் அரசாட்சி வகுத்த பொருளா

தார திட்டங்களே. ஆவடி காங்கிரஸில் இருந்து கட்சி பொருளாதார திட்டங்கள் இடது பக்கம் சரிய ஆரம்பித்தது. கட்சித் தலைவர்கள் இக்கொள்கைகள் தங்களால் வகுக்கப்பட்டவைகளாக இருந்தாலும் இந்திராகாந்திமேல் இருந்த துவேஷத்தால் அக்கொள்கைள் அமுல்படுத்தும் போது அதை எதிர்த்தார்கள். இவர்கள் நடுவு நிலைமையைக் கைப்பற்றி இந்த திட்டங்களை எதிர்க்காமலும் ஆதரிக்காமலும் இருந்திருக்கலாம். அப்பொழுது பொது ஜனங்கள் இவர்களை கடுமையாக நடத்தி இருக்கமாட்டார்கள். இவர்களே வகுத்த கொள்கைகளை இவர்களே எதிர்ப்பது ஜனங்களுக்குப்பிடிக்கவில்லை. இதை கட்சி பிளவுக்குப் பிறகு நடந்த உபதேர்தல் களிலும் கேரளா தேர்தலிலும் கண்டோம். பிளவுக்குப் பிறகு கட்சிக்கு தலைவர்களைச் சேர்ந்த ஸ்தாபன காங்கிரஸ் எங்கும் வெற்றி அடையவில்லை! இந்த பொது ஜனங்களின் அதிருப்தி கட்சித் தலைவர் களுக்குத் தெரிந்தும் வேணுமென்றே பராமுகமாக இருந்து வந்தார்கள். துவேஷத்தால் அவர்கள் அறிவு மங்கியது.

உத்திரப் பிரதேச கவர்னர் சரண்சிங்கை நீக்கினது ஜனநாயக முறைக்கு புறம்பானது என்று ஸ்தாபன காங்கிரஸின் கூட்டணி ஓலமிட்டார்கள். நியாயமாக கவர்னர் கோபால ரெட்டி திருபாதியிடம் தான் ராஜ்யத்தை ஒப்புவிக்க வேண்டும். எல்லா கட்சிகளைவிட இவர் தலைமை வகிக்கும் இந்திரா காங்கிரஸ் உறுப்பினர்கள் தான் அதிகமான எண்ணிக்கை. (இந்த முறையை மனதில் வைத்துக்கொண்டு தான் தமிழ் நாட்டு கவர்னர் ஸ்ரீ பிரகாசா முன்பு தமிழ் நாட்டின் அரசாட்சியை ஸ்ரீ பிரகாசம் தலைமையில் இருக்கும் கூட்டணிக்கு ஒப்புவிக்காமல் ராஜாஜியிடம் ஒப்புவித்தார். அப்பொழுது யாரும் எதிர்க்கவில்லை.) எதிர்க்கட்சிக்காரர்கள் சரண் சிங்கை கூட்டணியின் தலைவராக தேர்ந்தெடுக்காமல் உத்திரப் பிரதேச சட்ட சபையில் அங்கம் வகிக்காத T. N. சிங்கை தேர்ந்தெடுத்தார்கள். பிறகு மணிராம் தேர்தலில் அமோகமான வாக்குகளுடன் இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் T. N. சிங்கை தோற்கடித்த பிற்பாடும் சிங் பிரதமர் பதவியை உடும்புப் பிடியாக பிடித்துக் கொண்டிருந்தார். ஜனநாயக முறைப்படி அவர் யாரையும் கலக்காமல் உடனே கவர்னரிடம் ராஜினுமா கடிதத்தை கொடுக்க வேண்டும். பிரிட்டனில் உப தேர்தல்களில் ஆளும் கட்சி ஜெயிக்கா விட்டால் உடனே பிரதமர் ராஜினுமா செய்வது மரபு, ஜனநாயகவாதிகள் என்று சொல்லிக் கொண்டு ஸ்தாபன காங்கிரஸ் ஜனநாயக பண்பாடுடன் நடந்து கொள்ளவில்லை. பிறரை சர்வாதிகாரி என்று சொல்லுபவர்கள் தாங்கள் ஜனநாயக பண்புடன் நடக்க வேண்டும். ஸ்தாபன காங்கிரஸ் பேச்சிற்கும் செய்கைக்கும் சம்பந்தமே இல்லை. [அடுத்த இதழில் முடியும்]

---

[ 174-ம் பக்கத் தொடர்ச்சி ]

நாணை யிழுத்து நன்று குனித்த
வில்விற் கணைகள் விரைத்தன. வேல்கள்
சென்றன, திசைகள் சிரித்தன ... ...

இப்படிப் பல உதாரணங்கள் இத் தொகுப்பிலிருந்து காட்டுவது அருமையன்று.

''கந்தருவ கானம்'' எனற காப்பியத் துணுக்கு, இத்தொகுப்பின் வசீகர முகப்பாக அமைந்திருக்கிறது. இதில் உணர்வுகள் பண் ஏறி கந்தருவ விண்ணகத்தில் சஞ்சரிப்பது போன்ற பரவச நிலையை ரசிகர்களின் இதயத்தில் உண்டாக்குகின்றன. ஆம்; உண்மைக் கவிதைக்குரிய பண்ணழகு இந்தக் காப்பியத் துணுக்கில் உடலுக்கு உயிர்போல் அமைந்திருப்பதை உணர்கிறோம். சத்தியத்தின் நெஞ்சில் உள்ள அழகைக் கவிதை கண்டு காட்டுகிறது. தோல் அழகுமேல் அழகுகளை மட்டும் அல்ல. இத்தகைய கவிதானுபவம் வாய்க்கப் பெற்றவர் திருலோக சீதாராம்.

# வேத வேதாந்த பாடசாலை, பழூவூர்.

## 13—4—1971 ஆம் தேதியுடன் முடிவடைந்த வருடத்திய ஆதாய வரவு செலவு கணக்கு

| செலவுகள் | ரூ. பை. | ரூ. பை. | வரவுகள் | ரூ. பை. |
|---|---|---|---|---|
| 1 வேதாந்த பாடசாலை சம்பளம் | | | நிலவருமானம் | 11731 29 |
| ஸ்டைபண்டு | | 597 50 | வட்டி வருமானம் | 1295 33 |
| | | | டிவிடெண்டுகள் | 3511 99 |
| 2. வேதபாடசாலை :- | | | தென்னந்தோப்பு வரவு | 112 30 |
| கனபாடிகள் வகையரு சம்பளம் | 1686 00 | | வீட்டு வாடகை | 340 00 |
| பூஜை செலவு | 83 68 | | சில்லரை வரவு | 80 50 |
| | ---- | 1769 68 | | |
| 3. வைத்தியசாலை :- | | | | |
| வைத்தியர் சிப்பந்திகள் சம்பளம் | 2401 86 | | | |
| மருந்துச் செலவு | 1282 03 | | | |
| | ---- | 3683 89 | | |
| 4. இதர தருமங்கள் :- | | | | |
| சமயபுரம் தண்ணீர்ப் பந்தல் | 99 11 | | | |
| சங்கர ஜெயந்தி | 13 77 | | | |
| மகாப் பிரதோஷம் | 324 46 | | | |
| சிவன் கோவில் அன்னுபிஷேகம் | 41 75 | | | |
| ஸ்ரீ ராம் நவமி | 288 97 | | | |
| ஷஷ்டி | 50 00 | | | |
| நன்கொடை | 60 00 | | | |
| | ---- | 878 06 | | |
| 5. நிர்வாகம் மற்றும் இதர செலவுகள் :- | | | | |
| வீட்டுவரி | 10 30 | | | |
| மின்சாரச் செலவு | 55 35 | | | |
| பிரயாணச் செலவு | 53 45 | | | |
| தபால் செலவு | 2 10 | | | |
| கூலிக் கணக்கு | 29 80 | | | |
| பிரிண்டிங் ஸ்டேஷனரிக் கணக்கு | 144 47 | | | |
| வண்டிச் சத்தம் | 23 00 | | | |
| தீபாவளி இனும்கள் | 18 75 | | | |
| இனும்கள் | 15 50 | | | |
| கோர்ட்டுச் செலவு | 98 95 | | | |
| | ---- | 451 67 | | |
| 6. நிலத்தீர்வை | | 587 46 | | |
| 7, கட்டிட மராமத்துச் செலவு | | 131 98 | | |
| 8. நிலம் செய்நேர்த்திச் செலவு | | 339 75 | | |
| 9. புத்தக சந்தா | | 6 00 | | |
| 10. தேய்மானச் செலவு | | 84 83 | | |
| 11. நெல் சேதாரம் | | 121 13 | | |
| 12. நிகர லாபம் | | 8419 46 | | |
| | | ---- | | ---- |
| ஆக மொத்தம் | | 17071 41 | ஆகமொத்தம் | 17071 41 |

திருச்சிராப்பள்ளி.
14-6-71

கணக்குகள் பார்த்து சரியாக இருக்கிறது
N. கிருஷ்ணசாமி
சார்டர்டு அக்கௌண்டெண்ட்

டிரஸ்டிகள் :
A. V. சுப்ரமணிய அய்யர்
L. S. பார்த்தசாரதி அய்யர்

# வேத வேதாந்த பாடசாலை, பழூர்.

## 13—4—1971 ஆம் தேதியிலிருந்தபடியான கையிருப்புச் சீட்டு

| ருணங்கள் | ரூ. பை. | ரூ. பை. |
|---|---|---|
| பாடசாலை நிதி :- | | |
| சென்ற கையிருப்புச் சீட்டுப்படி | 110385 86 | |
| இவ்வருடத்தில் செலவுக்குமேல் வரவு | 8419 46 | 118805 32 |
| ஆகமொத்தம் | | 118805 32 |

| ஆஸ்திகள் | ரூ பை. | ரூ. பை |
|---|---|---|
| 1. நிலங்கள் :- | | |
| சென்ற கையிருப்புச் சீட்டுப்படி | | 21727 5 |
| 2. வீடுகள் மனைகள் :- | | |
| சென்ற கையிருப்புச் சீட்டுப்படி | | 15993 6 |
| 3. ஆபீஸ் சாமான்கள் :- | | |
| சென்ற கையிருப்புச் சீட்டுப்படி | 176 00 | |
| தேய்மானம் தள்ளுபடி | 160 50 | |
| | | 15 5 |
| 4. எலெக்டிரிக் பிட்டிங்குகள் :- | | |
| சென்ற கையிருப்புச் சீட்டுப்படி | 2448 09 | |
| இவ்வருடம் விலக்கிக் கொள்ளப்பட்டது. | 60 30 | |
| | 2387 79 | |
| தேய்மானம் தள்ளுபடி | 1574 99 | |
| | | 812 8 |
| 5. புத்தகசாலை :- | | |
| சென்ற கையிருப்புச் சீட்டுப்படி | 568 75 | |
| தேய்மானம் தள்ளுபடி | 548 75 | |
| | | 20 0 |
| 6. ஆயுதங்கள் :- | | |
| சென்ற கைரிருப்புச் சீட்டுப்படி | | 65 55 |
| 7. இன்வெஸ்ட்மெண்டுகள் :- | | |
| சென்ற கையிருப்புச் சீட்டுப்படி | 59298 34 | |
| இவ்வருடத்தில் கூடுதல் | 2000 00 | |
| | | 61298 34 |
| 8. கூடியிருக்கும் வட்டி | | 45 40 |
| 9. நெல் கையிருப்பு | | 2105 44 |
| 10. கடன்களும் முன் பணமும் :- | | |
| குத்தகை பாக்கி | 8958 69 | |
| வசக்கட்டு | 54 01 | |
| S. M. E. S. C. இல் டெபாசிட்டு | 40 00 | |
| | | 9052 70 |
| 11. ரொக்கமும் பாங்கு கணக்குகளும் :- | | |
| ரொக்கம் | 368 61 | |
| திருநிதி பாங்கு | 25 44 | |
| இந்தியன் ஓவர்சீஸ் பாங்கு | 190 24 | |
| பேங் ஆஃப் மதுரை | 7084 19 | |
| | | 7668 48 |
| ஆகமொத்தம் | | 118805 32 |

கணக்குகள் பார்த்து சரியாக இருக்கிறது
N. கிருஷ்ணசாமி
சார்டர்டு அக்கௌண்டெண்ட்

திருச்சிராப்பள்ளி.
14—6—71

டிரஸ்டிகள் :
A. V. சுப்ரமணிய அய்யர்
L. S. பார்த்தசாரதி அய்யர்



## அமுத வாக்கு

மக்களுக்குள்ளே கலகங்களும், யுத்தங்களும், கொலைச் செயல்களும் நேரிடாத வண்ணம் சமாதான நெறியிலே உலகத்தின் ஏழ்மையை தொலைக்கவேண்டும்.



Edited and Published by its owner Sri Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers 2-A, Fort Station Road, Trichy-2. Annual Subscription Rs. 10